# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Monday, the 27th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*per capita Income.*

* 1091 *Q.*—**SRI S. M. ANNAMALAI**: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் ஒரு ஆளுக்கு சராசரி வருமானம் **per capita income** எவ்வளவு?

(இ) விவசாயத் தொழிலாளர்கள், கைத்தறி நெசவுத் தொழிலாளர்களில் ஒரு ஆள் வருமானம் per capita income எவ்வளவு?

(உ) இந்த வித்தியாசத்தைப் போக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) *to* (*c*) The information is furnished in the paper[a] placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI**: ஸார், நான் கேட்டிருக்கிற கேள்வி ஒன்று, பதில் வேறு. அக்ரிகல்சர் லேபர் பற்றி நான் கேட்டேன், பதில் விவசாயத்தைப் பற்றி இருக்கிறது. ஆகவே, வேறொரு பதில் கனம் அமைச்சர் தருவார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN**: நான் அந்தக் கேள்வியைப் படிக்கிறேன். கனம் அங்கத்தினர் சொல்லுவது சரியா என்று பார்க்கட்டும். "நம் மாநிலத்தில் ஒரு ஆளுக்கு சராசரி வருமானம் எவ்வளவு?" We translate it, as what is the per **capita** income in our **State**? அடுத்ததாக, "விவசாயத்தொழில்" **as Agriculture** "கைத்தறி நெசவுத் தொழில்" as **Handlooms Industry**. Therefore the answer is correct.

**SRI S. M. ANNAMALAI**: நான் வைத்திருக்கும் தமிழ் கேள்வியில் "விவசாயக் கைத்தறி நெசவுத் தொழில்களில் ஒரு ஆள் வருமானம்" என்றிருக்கிறது; ஆங்கிலத்தில், "**per capita income of Agricultural labourers and weavers**" என்றிருக்கிறது. பர்கேபிடா இன்கம் ஆப் அக்ரிகல்சரல் லேபரார்ஸ் அண்ட் வீவர்ஸ் என்று இருக்கிறதே?

**THE HON. SRI R. VENKATARAMAN**: என்னிடத்தில் கேள்வி இருக்கிறது. "விவசாயக் கைத்தறி நெசவுத் தொழில்களில் ஆள் ஒன்றுக்கு வருமானம் எவ்வளவு?" என்றிருக்கிறது. என்னிடத்தில் அங்கத்தினர் கேட்கும் வகையில் கேள்வி இல்லை.

---

[a] **Printed as Appendix I on page 235 infra.**

[27th March 1961

SRI N. K. PALANISAMI : Due to increased deficit financing and increased indirect taxations and consequent abnormal increase in prices, will not the per capita income dwindle every year?

THE HON. SRI R. VENKATARAMAN : I do not think this question arises out of the main question. The hon. Member is asking about reasons for inflation and all that.

SRI K. VINAYAKAM : What was the average per capita income in our country before the launching of the First Five-Year Plan and after the finishing of the First Five-Year Plan? What was the per capita income before the Second Five-Year Plan was launched and what is it today?

THE HON. SRI R. VENKATARAMAN : For the first part of the question, a separate interpellation may be put. For the second part of the question, during 1955–56 the average per capita income in Madras State was Rs. 256·97. For 1957–58, for which figures are available, the per capita income was Rs. 283·32.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், மேசைமேல் வைக்கப்பட்டிருக்கக்கூடிய இந்த ஸ்டேட்மெண்டைப் பார்த்தால், அக்ரிகல்சுரல் லேபரருக்கு ஆவரேஜ் மாதம் ரூ. 15-ம், கைத்தறி நெசவாளர்களுக்கு ஆவரேஜ் 10 ரூபாயுமாகத் தெரிகிறது. ஆகவே இன்றைக்கு இருக்கக்கூடிய விலைவாசிகள் அடிப்படையில், அது போதுமான அளவுக்கு இருப்பதாகச் சர்க்கார் கருதுகிறதா? விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முயற்சி எடுக்க உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a different question altogether.

**SRI S. M. ANNAMALAI :** ஸார், முதலாவது திட்டம் ஆரம்பிக்கும் முன்னால் இருந்த இன்கமை விட இப்பொழுது குறைந்திருக்கிறது என்பது உண்மையா? விவசாயத்தில் அதிகமான ஆட்கள் ஈடுபட்டிருப்பது இதற்குக் காரணமா?

THE HON. SRI R. VENKATARAMAN : There is another question coming later on dealing with the Agricultural Labour Enquiry Committee's Report. I will answer questions of this kind when we come to that question.

SRI K. VINAYAKAM : After the First Five-Year Plan was launched, appreciable income has accrued to the national exchequer? In spite of such great increase in national income, is it not a fact that there is not such an increase in per capita income proportionately? If so, where has this excess of wealth gone into?

THE HON. SRI R. VENKATARAMAN : The per capita income is calculated on the basis of total population. Increase in population will show a reduction in the per capita income and increase in per capita income would then show a less than proportionate increase in the national income.

27th March 1961]

*Harijan Welfare Officers*

* 1092 *Q*.—**Sri A. R. MARIMUTHU (on behalf of Sri P. S. CHINNADURAI)** : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் எத்தனை ஹரிஜன கிராம உத்தியோகஸ்தாகள் இருக்கிறார்கள் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : The public interest served by answering the question would not be commensurate with the time and labour involved in collecting the particulars.

DEPUTY SPEAKER : Since the Hon. Minister for Revenue wants to go somewhere urgently, I will take up his questions, viz., Questions Nos. 1098, 1102 and 1108 now with the permission of the House.

*Stanley Hospital (increase in bed-strength)*

* 1098 *Q*.—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Advisory Committee of the Government Stanley Hospital has recommended to the Government to increase the bed-strength of the hospital from 750 to 1,000 within the Third Five-Year Plan Period?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir.

Sri A. A. RASHEED : May I know the steps taken to increase the bed-strength?

The Hon. Sri M. A. MANICKAVELU : Construction of a new women medical ward with 66 beds at a cost of Rs. 7 lakhs has now been sanctioned and the ward will be constructed. The existing cottages will be demolished. An additional ward of 24 beds has also been constructed on the second floor of Hope Block extension. When the above two wards are put into use, the total bed-strength of the hospital will be 822. There is also a proposal to construct a second-floor over the new out-patient block, which is now under construction to accommodate special ward patients of ' A ', ' B ' and ' C ' classes.

Sri A. A. RASHEED : Since the population of the State has increased by nearly 50 per cent in 20 years, will the Government try to increase the bed-strength in Government hospitals in the city?

The Hon. Sri M. A. MANICKAVELU : We are trying as far as possible to increase the bed-strength.

Sri K. B. S. MANI : ஸார், இந்த ஆஸ்பத்திரியில் நல்ல மருத்துவர்கள் இருப்பதால், ஜன நெருக்கடி அதிகமாக இருக்கிறது ; ஆனால் கம்பௌண்டிங் செக்ஷனில் போதுமான ஆள்கள் மருந்து கொடுக்க இல்லாத காரணத்தினால், வியாதியஸ்தர்கள் அதிகமாக இருப்பதால், காலம் தவறிப் போய்விடுகிறது, மருந்

[27th March 1961

துக்காக அவர்கள் காத்திருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, இது பற்றி புகார்கள் வந்தனவா? இந்த செக்ஷனை விஸ்தரிக்க வேண்டுமென்று கோரிக்கைகள் வந்தனவா? அதுபற்றி எடுக்கப் பட்டிருக்கும் நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த வேலையெல்லாம் ஒரு "பாட்டர்ன்" படி நடக்கிறது; இத்தனை பேஷண்டுகளுக்கு இத்தனை கம்பௌண்டர் என்று ஏற்படுத்துகிறார்கள். யாராவது லீவிலே போனால், அப்பொழுது கொஞ்சம் நெருக்கடி ஏற்படலாம். கூடுமானவரையில் பேஷண்டுகளுக்குத் தகுந்த மாதிரி, கம்பௌன் டர்கள் போட்டிருக்கிறோம்.

*Hospital at Jayankondan (construction of building)*

* 1102 Q.—SRI S. RANGANATHA MUDALIAR (on behalf of SRI K. R. VISWANATHAN): Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal to construct building for the Government Hospital at Jayankondan, Tiruchirappalli Division; and

(b) if so, when and what the cost thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The work will be taken up during the Third Five-Year Plan period. Its approximate cost is Rs. 3·17 lakhs.

*Agricultural Income-tax Revenue*

* 1108 Q.—SRI N. R. THIAGARAJAN : }
SRI T. S. RAMASWAMY : } கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

1959-ம் வருஷம் ஏப்ரல்மீ 1-ம் தேதி முதல் 1960-ம் வருஷம் மார்ச்மீ முடிய விவசாய வருமான வரி மூலம் நமது சர்க்காருக்கு ஜில்லா வாரியாக கிடைத்த வருமானம் எவ்வளவு?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] showing the particulars is placed on the table of the House.

SRI T. S. RAMASWAMY : In view of the fact that there is abnormal rate of income-tax prevailing in Kanyakumari district, will the Government review the position and try to bring it on a par with other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : I do not understand what the hon. Member means by saying "abnormal rate". Whatever rate is prescribed under the Act, is being levied.

---

[a] Printed as Appendix II on page 236 infra.

27th March 1961]

**SRI S. M. ANNAMALAI :** இந்த விவசாய வருமான வரி 1959-60-ஐ விட 1960-61-ல் போதிய அளவு குறைந்திருக்கிறது உண்மையா ? இதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இது ஏறுவதும் இறங்குவதும் சகஜம். காரணம் ஒன்றும் சொல்வதற்கில்லை.

SRI T. S. RAMASWAMY : May I know, Sir, whether it is a fact that the rates of income-tax in Kanyakumari district is much higher than in other districts. If so, will the Government look into the matter and bring it on a par with other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Member is aware that there is what is called basic tax in Kanyakumari district. He wants the advantages only and he does not want to take the disadvantages.

SRI T. S. RAMASWAMY : Two days back, Sir, the Hon. Minister gave a reply to a similar question that in the previous year, i.e., 1957–58, the agricultural income-tax derived from Kanyakumari district was only 7 lakhs but here it is mentioned as 13 lakhs. May I know, Sir, the reason why it is double here?

THE HON. SRI M. A. MANICKAVELU : Better collection, better seasonal condition, etc., are the factors

*Award of the Wage Board (implementation in Textile Mills)*

*** 1093 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் நாட்டிலுள்ள நூல் ஆலைகளில், சம்பள போர்டு தீர்ப்பை அமுல்படுத்தாத ஆலைகள் எத்தனை ?

(இ) அதற்குக் காரணமென்ன ?

(உ) சர்க்காரின் நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : A statement [a] is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN :** இரண்டாயிரம் ஸ்பிண்டிலுக்கு மேலாக இருக்கக்கூடிய மில்கள், நூல் ஆலைகளின் சம்பள போர்டு தீர்ப்பை அமுல் நடத்தவில்லை. இரண்டாயிரம் ஸ்பிண்டிலுக்கு மேலாக உள்ள மில்லில் நிர்வாகஸ்தர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் உள்ள தகராறு காரணமாகத்தான் நிறுத்தப்பட்டிருக்கிறது. இப்படி தொழிலாளர்கள் நலனைப் பாதுகாக்க முடியாத அளவில் இருக்கும்போது இதை சர்க்கார் எடுத்து நடத்தி போர்டின் தீர்ப்பை அமுலாக்குவதற்கு உத்தேசம் உண்டா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** சர்க்காருக்கு அவ்வித உத்தேசம் இல்லை.

[a] Printed as Appendix III on pages 237–239 infra.

SRI N. K. PALANISAMI : May I know, Sir, the stage at which rationalisation in Textile Mills stands?

THE HON. SRI R. VENKATARAMAN : I am told that the parties have not come to any agreement. I heard this information day before yesterday. It is part of the agreement of June 30 that rationalisation and increase in wages should go together. I hope some agreement would be reached on that.

**SRI V. K. KOTHANDARAMAN** : மீண்டும் இந்த ஆலை நிர்வாகஸ்தர்களை அழைத்து புனர் ஆலோசனை செய்து இந்த போர்டின் தீர்ப்பை அமுல் நடத்துவதற்கு ஏற்பாடு செய்ய சர்க்காருக்கு உத்தேசம் உண்டா?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இந்தத் தீர்ப்பை 68 மில்கள் அமுல் நடத்துவதற்கு ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பாக்கி இருக்கக்கூடிய 5, 6 மில்கள் அமுல் நடத்தாமல் இருக்கின்றன. காரணம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு மேல் சாக்கார் ஒன்றும் செய்வதற்கில்லை.

*City (Pilgrim Centre)*

***1094** *Q.*—**SRI P. G. MANICKAM** : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1956-ம் வருட ரயில்வே பிரயாணிகளின் சட்டத்தின் கீழ் சென்னை நகரத்தை ஒரு யாத்ரீக ஸ்தலமாக நிர்ணயம் செய்வது பற்றி மத்திய அரசாங்கத்திடமிருந்து தகவல் ஏதாவது கிடைத்திருக்கிறதா?

(இ) அப்படியாயின் அதன் விபரங்கள் யாவை?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) the Government of India have not agreed to the proposal for the following reasons :—

(1) Criticisms were voiced in the Parliament even when the terminal tax in Railway Passengers' Bill was put through in November 1956 in regard to the inclusion of places of exhibitions. The criticisms were that there was already a charge for people getting into the exhibition grounds and that there should not be another imposition in the shape of terminal tax when it should be the endeavour to induce people to come and see exhibitions.

(2) If the proposal is accepted even for a limited period from 16th December to 6th February, it will be extremely difficult for the Centre to resist proposals in respect of many other cities where exhibitions of one kind or another are being held.

(3) The railway is facing severe road competition; that an increase in fares consequent on the introduction of terminal tax may result in the traffic getting diverted to road during the period of levy of the proposed tax and that the levy of the Railway

27th March 1961]

Passenger Fare Tax with effect from 15th September 1957 under the Railway Passenger Fares Act, 1957, has already added extra charge on railway passenger traffic

SRI K. VINAYAKAM : Sir, is there any proposal of converting the City of Madras as a pilgrim centre during that period when there is lot of extra activities like holding of exhibitions and other fairs during the month of December? What would be the estimated income derived, if this is put into operation?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I must say that a place cannot be made a pilgrimage centre unless there is some religious importance attached to that place.

SRI S. NAGARAJA MONIGAR : ஏற்கனவே சென்னை நகரத்திலே இந்தப் பிரச்னையை சமாளிக்க முடியாமல் போய்க்கொண்டிருக்கிறது. மேலும் சென்னை ஜனங்களை வசீகரிக்கும் தன்மையில் இருப்பதால் சர்க்கார் அதன் கொள்கையை மாற்றுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இங்கு வசீகரிக்கும் தன்மையிலே ஒன்றும் இல்லை. வருவாயை அதிகரிக்கச் செய்வதற்கில்லை என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*No-tax Campaign (Thalavadi Hill area)*

* 1095 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether the Government are aware of any No-tax Campaign launched by the villagers of Thalavadi Hill area during September and October 1960;

(b) if so, the reasons therefor; and

(c) the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) There has been no such movement in the place.

(b) & (c) Do not arise.

*Pasupatheeswarar Devasthanam (non-hereditary trustees)*

* 1096 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, கும்பகோணம் தாலுகா, பந்தநல்லூர் ஸ்ரீ பசுபதீஸ்வரர் தேவஸ்தானத்துக்கு பாரம்பரை பாத்தியதை அல்லாத டிரஸ்டிகள் நியமிக்கும் உத்தேசம் எந்த நிலையில் உள்ளது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The matter is under consideration of the Commissioner, Hindu Religious and Charitable Endowments, Madras.

[27th March 1961

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : பந்தநல்லூர் ஸ்ரீ பசுபதீஸ்வரர் தேவஸ்தானத்திற்கு பரம்பரையாக இருந்த டிரஸ்டிக்கு ஏதோ தகராறு ஏற்பட்டு இதனால் வேறு டிரஸ்டிகளை நியமிக்க மனுக்கள் கோரப்பட்டிருக்கின்றனவா? டிரஸ்டிகளை வேறு முறையிலே அமைக்கப்போகிறார்களா? அல்லது பரம்பரை டிரஸ்டிகளை நியமிக்கப்போகிறார்களா? ஏன் பரம்பரை டிரஸ்டி நீக்கப்பட்டிருக்கிறார் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பரம்பரை டிரஸ்டி சரியான முறையில் நடந்துகொள்ளாததினால் அவர் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார். அடிஷனல் டிரஸ்டி என்று வேறு டிரஸ்டிகள் போடுவதற்கு வசதி செய்கிறார்கள். அதற்கு மனுக்கள் வருகின்றன. அவைகளையெல்லாம் பார்த்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்த அடிஷனல் டிரஸ்டியை எப்போது போடப்போகிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதற்கு மனுக்கள் வருகின்றன. அவைகளைப் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI A. VEDARATHNAM : இந்த பரம்பரை டிரஸ்டியின் பேரில் என்ன குற்றச்சாட்டு? ஏன் டிஸ்மிஸ் செய்யப்பட்டார்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில தவறுகள் ஏற்பட்டதினால் டெபுடி கமிஷனர் நடவடிக்கை எடுத்துக்கொண்டு அவரை சஸ்பெண்ட் செய்திருக்கிறார்.

SRI K. B. S. MANI : பரம்பரை டிரஸ்டிகள் எந்த அடிப்படையிலே நியமிக்கப்படுகிறார்கள்? புராதன சொத்துக்கள் கோவிலுக்கு எழுதிவைத்ததின் பேரிலே அவர்கள் கோவில் சொத்துக்கு வாரிசாக நியமிக்கப்படுகிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சட்ட ரீதியிலே செய்யப்படுகிறது. இதற்குமேல் ஒன்றும் விளக்குவதற்கில்லை.

*Pranthaneri tank water (utilization)*

* 1097 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any scheme has been sanctioned for the utilization of the overflow water from Pranthaneri tank in the Kanyakumari district, for the dry lands of Tirunelveli district; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No. Sir

(*b*) Does not arise.

27th March 1961]

*Tyre factory*

* 1099 Q.—SRI M. P. SARATHI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் தனியார் துறையில் டயர் உற்பத்தி தொழிற்சாலை நிறுவ அமெரிக்காவிலுள்ள மேஸ்பீல்ட் டயர், ரப்பர் கம்பெனி முன்வந்துள்ளதா ?

(இ) இந்த முயற்சி எந்த நிலையிலுள்ளது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Government have no information on the subject.

(இ) Does not arise.

SRI A. A. RASHEED : Sir, in view of the shortage of tyres and tubes, will the Government consider the starting of a factory in the public sector?

THE HON. SRI R. VENKATARAMAN : There is no such proposal, Sir.

*State Trading Corporation*

* 1100 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் ஸ்டேட் டிரேடிங் கார்ப்பொரேஷன் இருக்கிறதா ?

(இ) அது இதுவரை செய்த வேலை என்ன ?

(உ) இலங்கைக்கு மிளகாய் வத்தல் ஏற்றுமதி நடந்ததா ? சென்ற இரண்டாண்டில் எவ்வளவு ஏற்றுமதி ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The State Trading Corporation is an organization sponsored by the Government of India and the State Government have no information regarding the work turned out by it.

(*c*) The quantities of chillies exported from Madras State to Ceylon are :

In 1958—4,622 tons.

In 1959—1,409 tons.

SRI N. R. THIAGARAJAN : மூன்று நான்கு ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய தொகுதியிலிருந்து அதிக மிளகாய் ஏற்றுமதி செய்யப்பட்டது. இப்பொழுது ஆந்திராவிலிருந்தும், வங்காளத்திலிருந்தும் அதிகமாக ஏற்றுமதி செய்யப்படுகிறது. தமிழ் நாட்டிலிருந்து ஏன் அதிகமாக ஏற்றுமதி செய்யவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு எற்றுமதி செய்ய முடியும் என்று அந்தந்த ராஜ்யத்தின் யோசனையை ஸ்டேட் டிரேடிங் கார்பொரேஷன் மூலமாக கேட்கிறார்கள். அந்தந்த

ராஜ்யங்களில் எவ்வளவு கொடுக்க முடியும், விலைவாசி எவ்வளவு, மிச்சம் எவ்வளவு என்று ராஜ்ய அரசாங்கம் தெரிவிக்க வேண்டும். அந்த வகையில்தான் ஏற்றுமதி அனுமதிக்கப்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : இப்படி மிளகாய் வற்றலை அதிகமாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யாமல் இருப்போமானால் நமது ராஜ்யத்தில் இவற்றின் விலை சற்று இறங்குவதற்கு அனுகூலமாக இருக்காதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத்தான் நான் விடை அளித்தபோது பதில் சொன்னேன்.

*Temple servants (demands)*

* 1101 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் ஜில்லா ஹிந்து தேவாலய சிப்பந்திகள் சங்கம் 1960-ம் வருடம் ஜூலை மீ 5-ம் தேதி அரசாங்கத்திற்கு அனுப்பிய அச்சிட்ட விளம்பரத்தில் உள்ள 15-வது தீர்மானத்தின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

(ஆ) அக்கோரிக்கையில் ஏதாவது அமுலுக்கு வருமா ? எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) The Government have not received any such representation.

(ஆ) Does not arise.

SRI N. K. PALANISAMI : Sir, may I know whether the Government have been receiving repeated representations from the temple workers of not only the Tanjore temple but also the Madurai Meenakshi temple and other temples? May I also know whether it is not a fact that the Hon. Minister had promised to increase their emoluments at the time when the Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill was discussed here? If so, have the Government directed the trustees and executive officers of these temples to take early steps to increase the emoluments of the employees working in their respective temples?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government cannot give any such direction. But, I may inform the hon. Member that the trustees of these temples have been looking into the matter and they have been revising the emoluments of the employees of the temples. Further, I may tell the hon. Member and others that the Madras State Temple Officers (Out-door) Employees Association has also been there and it has been recognized by the Endowments Board. All servants of the temples may become members of the Association and they may make representations, if any, through that association.

27th March 1961]

SRI A. VEDARATHNAM : இப்போது ஆலய நிர்வாகங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டதிலிருந்து ஆலயங்களில் வேலை செய்கிற சிப்பந்திகள் அனைவருக்கும் பே கமிஷன் ரிபோர்ட் படி பே ஸ்கேல் நிர்ணயிக்கப்படுமா ? இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா வகுப்பினரும் சிப்பந்திகளாக நியமிக்கப்படுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆலய நிர்வாகத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவில்லை. அந்த அந்த ஆலய தர்ம கர்த்தாக்கள்தான் நிர்வகித்து வருகிறார்கள். ஆலய நிர்வாகத்தை அவ்வப்போது இலாகா மேற்பார்வை பார்த்து வருகிறது. அவ்வளவுதான். சில உத்தியோகஸ்தர்கள்தான் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாகக் கருதப்படுகிறார்கள். பே கமிஷன் இவர்களுடைய சம்பள விகிதம் பற்றி சிபார்சு செய்திருந்தால் அது அமுல் செய்யப்படும். மற்றப்படி உத்தியோகஸ்தர்கள் நியமனம் சம்பந்தப்பட்ட வரையில்—மற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர்களை எவ்வாறு நியமனம் செய்கிறோமோ அவ்வாறேதான் நியமனம் செய்து வருகிறோம்.

*Agricultural Labour Enquiry Committee (Report)*

* 1103 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்காரால் அமைக்கப்பட்ட இரண்டாவது விவசாயத் தொழிலாளர் விசாரணைக் கமிட்டியின் அறிக்கை கிடைத்ததா ?

(இ) அப்படியாயின் அதன் விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) Three copies of the summary of the report and its main findings have been placed in the Legislature Library for the use of the Members. The report is under examination.

SRI S. M. ANNAMALAI : இந்த விவசாயத் தொழிலாளர்களுடைய பர் காபிடா வருமானம் 1950-51-ல் இருந்ததைவிட இப்போது மிகவும் குறைந்திருக்கிறது என்பது உண்மையா, இல்லையா ? இப்படிக் குறைந்து போனதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் பொது விவாதத்தின்போதே இதைப்பற்றிச் சொன்னார். உடனே அதற்காகத்தான் இதைப் பற்றி ரிசர்ச் செய்து பார்த்தேன். முதல் என்க்குவயரியில் இருந்ததைவிட இரண்டாவது என்க்குவயரியில் குறைந்திருப்பதற்குக் காரணம் முதல் தடவை எவ்வாறு புள்ளிவிவரங்களைச் சேகரித்தார்களோ அதேபோல இரண்டாவது முறை சேகரிக்கவில்லை. அந்த ஒரே அடிப்படையில் சேகரித்திருந்தால்தான் இரண்டு புள்ளி விவரங்களையும் ஒப்பிட்டுப் பேச முடியும். ஒரே அளவுகோலாக அது இருந்தால் தான் ஒப்பிடுவது சரியாக இருக்கும். அப்படி இல்லை. ஆனால்

[27th March 1961

அவ்வாறு முன் ஒரு மாதிரியாகவும், பின் ஒரு மாதிரியாகவும் அந்தப் புள்ளி விவரங்களைச் சேகரித்திருக்கிறார்கள் என்பதற்கு இதைப் படித்துக்காட்ட விரும்புகிறேன்.

Sir, I shall now read one part of the answer in English.

" Difference in imputation procedure for payments in kind as between the First and Second Enquiry, and the relative importance of payments in kind at both the two points of time. In the First Enquiry, only 31·3 per cent of the man-days were paid for in kind while in the Second Enquiry, the corresponding percentage was 40·5. The cash imputation for payments in kind was done at rural retail prices in the First Enquiry (1950–51) and at wholesale prices in the Second Enquiry (1956–57). In view of this difference in procedure, the relative fall during 1956–57 might be apparent and not real to some extent."

இதுதான் முக்கியமான காரணம். முதல் விசாரணையில் ரீடைல் ப்ரைஸ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாவது விசாரணையில் ஹோல் சேல் ப்ரைஸ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ரீடைல் ப்ரைஸைவிட ஹோல்சேல் ப்ரைஸ் நிச்சயமாகக் குறைச்சலாக இருக்கும். அதோடு இன்னொன்று. 1950-51-ல் ரேஷனிங் இருந்த சமயம். ரீடைல் ப்ரைஸ் என்றால் ரேஷன் கடை விலையைக் கணக்கெடுத்துக்கொண்டார்களா, ப்ளாக் மார்க்கெட் அவுட் சைட் ப்ரைஸ் கணக்கெடுத்துக்கொண்டார்களா என்கிற விவரமும் காணப்படவில்லை. அதனால்தான் இந்த மாறுதல் தென்படுகிறது. அதேசமயத்தில் விவசாயிகளுடைய மொத்த வருமானம் இங்கே உயர்ந்திருக்கிறது என்பதாக அந்த ரிபோர்ட்டில் கண்டிருக்கிறது. உபதொழில்களிலிருந்து வருகிற வருமானத்தையும் சேர்த்தால் நிச்சயமாக அதிகமாக இருக்கும். இதை சாப்டர் எட்டு, பாரா 1-ல் கொடுத்திருக்கிறார்கள்.

Compared with the position in 1950–51, the average household income was higher in 1956–57 in West Bengal, Assam, Andhra Pradesh, Madras, Bombay, Mysore and Punjab.

SRI S. M. ANNAMALAI : அவர்கள் புள்ளி விவரம் சேகரித்தது தவறு என்றால் விவசாயிகளுடைய பர் காபிடா வருமானம் எவ்வளவு? அதிகரித்திருக்கிறதா, குறைந்திருக்கிறதா என்பதைக் காண ஒரு தனி கமிட்டியைப் போட்டு பரிசீலிக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்காக ஒரு கமிட்டி போடவேண்டிய அவசியம் இல்லை. பர் காபிடா வருமானம் 'டிரண்டை'க் கண்டுபிடிக்க உதவியாக இருக்குமே தவிர வேறு எதற்கும் பயன் இல்லை. சென்னை ராஜ்யத்தில் விவசாயிகளுடைய மொத்த வருமானம் உயர்ந்திருக்கிறது என்பதை அதே ரிபோர்ட்டில் சொல்லியிருக்கிறார்கள்.

27th March 1961]

*Supply of tractors (Chengam taluk)*

• 1104 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செங்கம் தாலூகா மார்க்கெட்டிங் சொசைட்டியார் ட்ராக்டர் வேண்டுமென்று கோரி ரிஜிஸ்ட்ரார் மூலமாக சர்க்காருக்கு எழுதியுள்ளார்களா ?

(இ) எத்தனை ட்ராக்டர்கள் கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN: கூட்டுறவு சொஸைடிகளுக்கு முதல் சலுகையாக கவனித்துத் தனியாருக்குக் கொடுப்பதைவிட இவர்களுக்குத்தான் முதன் முதலாகக் கொடுக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. அதைப்போன்று மேற்கண்ட சொஸைடியார் வாங்கவேண்டுமென்ற அளவுக்கு முன் வந்தும் கூட கொடுக்க முடியாத அளவுக்கு நிலைமை இருப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: "செங்கம் தாலூகா மார்க்கெட்டிங் சொஸைடியார் ட்ராக்டர் வேண்டுமென்று கோரி ரிஜிஸ்ட்ரார் மூலமாக சர்க்காருக்கு எழுதியுள்ளார்களா?" என்பது மூலக் கேள்வி. அதற்குப் பதில், இல்லை' யென்று சொன்னேன். இப்போது கனம் அங்கத்தினர் கேட்பது எல்லாம் அதிலிருந்து எழவில்லை.

*City roads (repairs)*

• 1105 *Q.*—SRI A. A. RASHEED:
SRI T. S. RAMASWAMY: } Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal to take over the Madras City roads for the purpose of repair; and

(*b*) if so, the steps taken by the Government to repair and improve the City roads in general and Royapettah High Road especially after the recent rains?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) & (*b*) There is no proposal to take over the city roads for the purpose of repairs. The Government have, however, sanctioned to the Corporation, a sum of Rs. 15 lakhs as loan and another sum of Rs. 15 lakhs as grant during the current year for improvement and maintenance of certain portions of Mount Road and Poonamallee High Road and certain bus route roads to be selected in consultation with the Director of State Transport. Apart from this, no separate assistance has been given in regard to Royapettah High Road.

[27th March 1961

* 1106 Q.—Sri N. K. PALANISAMI :
Sri T. S. RAMASWAMY : } Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether the Government propose to enhance the grant given to the Corporation for the maintenance of City roads;

(b) whether the Corporation has been asking for Government's help for the improvement of the City roads; and

(c) if so, the financial help rendered by the Government for the last three years to the Corporation for the improvement of City roads?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) The matter is under the consideration of the Government.

(b) The answer is in the affirmative.

(c) The Government paid the usual annual grant of Rs. 5.41 lakhs to the Corporation for the maintenance of roads during the past three years. The following additional loans and grants have been specially sanctioned to the Corporation for repairs and improvements to specified roads :—

| Year. | Loan. | Grant. |
|---|---|---|
| | RS. | RS. |
| 1957-58 .. | Nil. | 4,000/- |
| 1958-59 .. | 50,000/- (for improvement to roads in extended area). | 5,00,000/- (Repairs to roads damaged by rain and flood). |
| 1959-60 .. | 1,00,000/- .. .. .. .. | 1,00,000/- |

9 a.m SRI A. A. RASHEED : Sir, may I know whether any time-limit has been fixed for the repair of roads in the Madras City?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I cannot exactly say that now, because I have not got the information.

SRI N. K. PALANISAMI : What steps have been taken to repair the interior roads in the Madras City?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The Government give only assistance. It is only the Corporation and the Transport Authority which have to consider, on what roads repair has to be done.

SRI K. VINAYAKAM : Are the Government aware of the propaganda carried on by the party in power in the Corporation that the Government are very niggardly in sanctioning grants or loans to them and that they are partisan in their outlook and that is the reason for their failure to maintain the roads in a proper condition?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : So far as the Government are concerned, they are not very much worried about the propaganda carried on by others. But whenever the Government think that roads are bad and the Corporation needs help, they make a special contribution by giving them grants or loans.

27th March 1961]

SRI T. S. RAMASWAMY : May I know the reason why Rs. 15 lakhs by way of grant and Rs. 15 lakhs by way of loan were given this year when Rs. 1,50,000 alone were given in the previous year?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Because the Government considered that there was greater necessity this year.

SRI A. A. RASHEED : Since the Poonamallee High Road and the Mount Road come under the National Highways, may I know whether this Government have approached the Union Government for any specific grant or subsidy for the repair of these two roads?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : As I have stated wherever the roads are bad, the Corporation are repairing them. As regards the roads mentioned by the hon. Member coming under National Highways, all the roads in the Madras City are maintained by the Corporation and I expect that the Corporation will look after them.

SRI K. VINAYAKAM : Apart from these two main roads, what are the roads for which repairs are immediately needed and for which the Corporation has made a request to the Government for loan or grant? Did they include the Arcot Road in Kodambakkam in that list?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I want a separate question.

SRI N. R. THIAGARAJAN : கொடுத்த உதவித் தொகைகளை கார்ப்பரேஷனினால் பல இனங்களில் செலவழிக்க முடியவில்லை என்று கூறப்படுகிறது. எதை எதை செலவழித்திருக்கிறார்கள், எதை எதை செலவழிக்காமல் தொகைகளை அப்படியே விட்டு விட்டார்கள்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதில் ஒரு தகராறோ அல்லது புகாரோ வரவில்லை. செலவழிக்கப்படவில்லை என்றில்லை. இன்னும் அதிகப்படியான நிதி வேண்டுமென்றுதான் அவர்கள் கேட்டிருக்கிறார்கள்.

*Hindi (compulsory subject)*

* 1107 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் தேர்ச்சிக்கு எந்த ஆண்டு முதல் "ஹிந்தியும்" ஒரு கட்டாயப்பாடம் என்று உத்தர விடப்பட்டுள்ளது?

(இ) என்ன காரணத்தினால்?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) Hindi is not taught as a compulsory subject in Secondary Schools.

[27th March 1961

Sri A. A. RASHEED : May I know the reasons for not teaching Hindi as a compulsory subject?

The Hon. Sri C. SUBRAMANIAM : Because of the language policy.

**Sri S. M. ANNAMALAI :** ஹிந்தியை கட்டாய பாடமாக்காவிட்டாலும் கூட ஹிந்தி படிக்கிற மாணவர்கள் எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சையில் இவ்வளவு மார்க்ஸ் வாங்கினால்தான் தேர்ச்சி பெற முடியும் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ளார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** ஹிந்தி எடுத்துப் படித்தால் அதில் பரீட்சை எழுதவேண்டுமென்று சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறது.

Sri S. NAGARAJA MONIGAR : தாய்மொழியின் அவசியத்தை கவனிப்பது எவ்வளவு அவசியமோ அதற்கு சிறிது குறைந்த பங்காவது ஒரு பொது மொழி அவசியம் என்று வற்புறுத்தும் வகையில் இந்தி கட்டாய முறையைத் தவிர்த்து வேறு ஏதாவது முறையில் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து முன்னுக்கு கொண்டு வர முடியுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இப்பொழுது நாம் வகுத்திருக்கிற கொள்கைப்படி இந்திக்கு போதுமான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

*Wild Life Sanctuaries*

*** 1109 *Q.*—Sri A. VEDARATHNAM :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் வனவிலங்கு சரணாலயம் எங்கெங்கே துவக்க திட்டமிடப்பட்டிருக்கிறது?

(இ) எப்போது? என்ன செலவில்?

(உ) ஒவ்வொரு காட்டிலும் என்னென்ன மிருகங்கள் வளர்க்கப்படும்?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ( ) It is proposed to open four new Wild Life Sanctuaries at Muthukuzhivayal in Kanyakumari district, Topslip in Coimbatore district, Kodaikkanal in Madurai district and at Kodaikadu in Thanjavur district.

(இ) These new Sanctuaries will be constituted as early as possible and within the Third Five-Year Plan period, if possible.

The cost involved will be known only after the extent to be covered, the improvements to be carried out and the staff, etc., to be employed, are determined after investigation of the respective areas which is now in progress.

(உ) Three copies of a statement showing the different species of animals and also birds that would be protected in the new Sanctuaries are placed in the Library of the Legislative Assembly.

27th March 1961]

SRI A. VEDARATHNAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இதையெல்லாம் வன விலங்கு சரணாலயங்களாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்றால் இப்பொழுதே அதற்கான பூர்வாங்க வேலைகள் நடைபெற வேண்டுமே, அவை ஏதாவது நடைபெற்று வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் உத்தேசம். இப்பொழுது பூர்வாங்க வேலைகள் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. இது விஷயத்தில் 1,05,000 ரூபாய் கூட ஒதுக்கப் பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : May I know whether there was a proposal to start a sanctuary in the Kanyakumari district and if so, whether that proposal has been dropped?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முத்துக்குழிவயல் என்று சொன்னேனே, அது கன்னியாகுமரியைச் சேர்ந்ததுதான்.

SRI N. MARUDACHALAM : கோவையில் ஒரு வன விலங்கு சரணாலயம் எடுத்துக்கொள்ள முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவோ எடுத்துக்கொள்ளலாம். இப்பொழுது நான்கு எடுத்துக் கொள்ள உத்தேசம்.

*Bill-collectors (promotion)*

* 1110 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம், ஆரணி நகராட்சி மன்றத்தில் கலெக்டர்களின் உத்தியோக உயர்வு குறித்தும், இன்னும் சில சலுகைகளைக் குறித்தும் 1960-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 29-ம் தேதியில் நகராட்சி மன்றத்தால் நிறைவேற்றிய தீர்மானம் கிடைத்ததா ?

(இ) அப்படியாயின், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) No such resolution has been received by Government.

(இ) The question does not arise.

*Dealers in old bottles (sales tax)*

* 1111 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் பழைய மார்க்கெட் வியாபாரிகளின் சங்கச் செயலாளர் அவர்களின் 20—1—1961 தேதியிட்ட பழைய பாட்டில் (old scrap bottles) வியாபாரிகள் மீது விதித்துள்ள விற்பனை வரியை ரத்து செய்யும்படி கோரிய மனு கிடைத்ததா ?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir. But the petition is dated 22nd December 1960.

(  ) The representations are under the consideration of the Government.

SRI V. K. KOTHANDARAMAN : பழைய பாட்டில்களை அரை அணு, ஒரு அணு என்று வீதிகள் எல்லாம் சுற்றி வாங்கி விற்பனை செய்யக்கூடிய தொழில் இது. ஆகவே இப்படிப்பட்ட ஏழை மக்கள் பேரில் கூட வரி விதிப்பது கன்ஸிடரேஷனில் இருப்பதாக சொன்னார்கள், அது வரவேற்கத்தக்கது. ஆகவே தயவுசெய்து கண்டிப்பாக ஏப்ரல் முதல் தேதியிலிருந்தாவது அதை தள்ளு படி செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப் பற்றிய அமெண்ட்மென்ட் இன்று வருகிறது. அப்பொழுது சொல்லலாம்.

DEPUTY SPEAKER : அதைப் பற்றிய மசோதா கூட வருகிறது.

*Growing of trees on the hills (Vellore)*

*1112 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வேலூர் அருகேயுள்ள மலையில் மரம் வளர்க்கும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

SRI S. M. ANNAMALAI : வேலூர் அருகில் மலைகள் இரண்டு மூன்று இருக்கின்றன. எந்தெந்த மலைகளில் எந்தெந்த மரங்கள் வளர்க்க முயற்சி செய்து வருகிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேலூர் நகரசபை கேட்டார்கள். போர்ட் ஹில், கோட்டை மலை என்று இருக்கிறது. மொத்த விஸ்தீரணம் 1,206 ஏக்கர் இருக்கிறது. அதில் 9 விதமான செடிகளை வைத்து வளர்க்க உத்தேசம்.

SRI V. K. KRISHNAMURTHY : வேலூர் கோட்டை மலையில் மரங்கள் வளர்ப்பது பற்றி 1958-ல் வன இலாகா அதிபர் அவர்கள் சிபார்சு செய்தார்கள். எப்பொழுது அதை ஆரம்பிக்க அரசாங்கம் ஆணையிடும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் இப்பொழுது சொன்னேன். சீப் கன்ஸர்வேட்டர் என்னென்ன செய்வது என்பது பற்றி ப்ரப்போஸல்ஸ் அனுப்பியிருக்கிறார். மேற்கொண்டு அவை எடுத்துக்கொள்ளப்படும்.

27th March 1961]

SRI A. A. RASHEED : வட ஆற்காடு ஜில்லாவில் மரமில்லாத மலைகள் எவ்வளவு உள்ளன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தக் கணக்கு என்னிடம் இல்லை. கனம் அங்கத்தினர் அவர்களிடம் புள்ளி விவரம் இருந்தால் எனக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

*Steel Rolling Mill (Location)*

* 1113 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்தில் புதிய ஸ்டீல் ரோலிங் மில் எங்கு நிறுவ உத்தேசமிருக்கிறது ?

(இ) என்ன செலவில் ?

(உ) இதற்கு மாகாண, மத்திய, வெளிநாட்டு உதவி எவ்வளவு ?

(எ) உற்பத்தியின் அளவு எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The Government of India have been addressed to agree to license some mills of each with a re-rolling capacity of 20,000 tons per annum. Their decision is awaited. It is proposed to put up one of the mills in the Public Sector. Its location has not yet been decided. Now the Government of India have agreed to one mill in the Public Sector.

(இ) It is proposed to make provision of a sum of rupees one hundred lakhs in the Third Five-Year Plan for the proposed steel re-rolling mill in the Public Sector.

(உ) The entire cost of the public sector mill is to be met from State funds.

(எ) The mill in the public sector will have a capacity of about 20,000 tons per annum.

SRI A. VEDARATHNAM : இந்த பப்ளிக் செக்டர் தொழிற்சாலை எந்தயிடத்தில் ஆரம்பிக்கப்படும்? இப்பொழுது இருக்கிற ஸ்டீல் ரோலிங் மில்லை விஸ்தரிக்க ஏதாவது அரசாங்க உதவி யுண்டா ? விஸ்தரிக்க திட்டமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN எந்தயிடத்தில் வைப்பது என்று இன்னும் நிர்ணயம் செய்யப்படவில்லை, பப்ளிக் செக்டரில் இருக்கக் கூடிய ரீ ரோலிங் மில்ஸ் பற்றி. இப்பொழுது நடந்து கொண்டிருக்கிற ரீ ரோலிங் மில்லை விஸ்தரிப்பதற்கு அந்த கம்பனியார் முயற்சிகள் எல்லாம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

SRI N. K. PALANISAMI : May I know whether steps have been taken to increase the capacity of the steel rolling mills at Nagapattinam? Why not Government help them?

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member is saying something without perhaps knowing the facts. Government have already helped them to expand the steel rolling mill at Nagapattinam.

[27th March 1961

SRI T. K. SUBBIAH : ஸார், தனியார் துறையில் இந்த வேலையை நடத்துவதற்கு திருச்சி ஜில்லாவிலிருந்து மனுக்கள் வந்திருக்கின்றனவா, அவைகள் பரிசீலிக்கப்பட்டிருக்கின்றவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவ்விதம் மனுக்கள் வந்திருக்கும் என்று நம்புகிறேன். இது போன்று ஏராளமான மனுக்கள் வந்திருக்கின்றன.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்தத் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கு போதிய வசதிகள் இருக்கவேண்டும் என்று இருந்தபோதிலும்கூட, நகரங்களை விட்டு அருகாமையில் இருக்கும் இடங்களில் இம்மாதிரிப்பட்ட தொழிற்சாலைகளை ஆரம்பிக்க சர்க்கார் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஆலோசனை எப்போதும் அரசாங்கத்தின் முன்னுல் இருந்து கொண்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : ஸார், இப்போது இருக்கின்ற ஸ்டீல் ரோலிங் மில்லை விஸ்தரிப்பதற்கு அரசாங்கத்தினிடம் என்னென்ன உதவியை கேட்டிருக்கிறுர்கள், அவற்றில் எவற்றை யெல்லாம் அரசாங்கம் ஒத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது தனியார் துறையைப் பொறுத்த விஷயமாய் இருப்பதால், அவைகளை எல்லாம் இப்போது சொல்லுவதற்கில்லை.

SRI T. S. RAMASWAMY : May I know whether we are getting adequate quantities of billets for these mills?

THE HON. SRI R. VENKATARAMAN : We expect that with the commissioning of the three giant steel plants in the country, billets will be available and then the situation will ease.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், இந்த ஸ்டீல் ரோலிங் மில்லுக்கு எந்தெந்த ஜில்லாக்களிலிருந்து எல்லாம் மனுக்கள் வந்திருக்கின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மனுக்கள் நிறைய வந்திருக்கின்றன. அவைகளை எல்லாம் இப்போது சொல்லுவதற்கு சர்க்கார் தயாராக இல்லை.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : நிலக்கரியை கொண்டு வருவதற்கு பல இடங்களில் வண்டி கிடைப்பதில்லை என்கின்ற நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அப்போது இதற்கு 60 ஆயிரம் பில்லட்ஸ் வேண்டுமே. அதைக் கொடுப்பதற்கு ஏதாவது கியாரண்டி கொடுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பெரிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கும் போது இவைகளை எல்லாம் கவனித்துத்தான் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. தேவையான பில்லட்டுகள் காலா காலத்தில் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடுதான் இதற்கான முயற்சிகள் செய்யப்படுகின்றன.

27th March 1961]

*Industrial Disputes (disposal)*

* 1114 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

முதலாளிகளால் குற்றம் சாட்டப்படும் தொழிலாளர்கள் விஷயமாக விசாரணை செய்து தீர்ப்பு கூற தொழில் தகராறு கோர்ட்டுகளிலும் மற்ற தொழிலாளர் நீதி மன்றங்களுக்கும் விடப்படும் கேஸ்களை அதிகபட்சம் ஆறு மாதத்திற்குள்ளாக விசாரணை செய்து தீர்ப்பு அளிக்கவும், அந்த விசாரணை காலத் திற்கு 3-ல் 2 பகுதி சம்பளம் கொடுக்கவும் சட்டம் கொண்டுவர சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இல்லை, ஐயா.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது தொழி லாளர்கள் திடீரென்று வேண்டுமென்றே பழிவாங்கப்படுகிறார்கள். அதோடு கோர்டுக்கு விடப்பட்ட வழக்குகள் எல்லாம் விசாரணை செய்வதற்கும் பல ஆண்டுகள் ஆகின்றன, அதோடு மீண்டும் அந்த வழக்குகளை கோர்ட்டுகளில் கொண்டுபோகவேண்டியிருக்கிறது, இவைகளையெல்லாம் அமைச்சர் அவர்கள் அறிவார்கள். இதன் காரணமாக தொழிலாளர்கள் பசியும், பட்டினியுமாக இருந்து கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச ஊதியத்தையும், ஆறு மாதத்திற்குள் விசாரணை செய்து முடிக்கவேண்டும் என்பதையும் தீவிரமாக அமுலில் கொண்டு வர அரசாங்கம் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா என்பதை அறிய வேண்டுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இது நம்முடைய ராஜ்யத்தில் மட்டும் இருக்கின்ற பிரச்னை அல்ல. அகில இந்திய ரீதியில் இருக்கின்ற பிரச்னை. இதைப்பற்றி பார்லிமெண்ட் தான் முடிவு செய்ய வேண்டும். மத்திய அரசாங்கம் இதில் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளும் என்று நாம் நம்பலாம்.

*New Agricultural College (Third Plan)*

* 1115 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) இம் மாநிலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயக் கல்லூரி ஆரம்பிக்கும் உத்தேசமுண்டா ?

(இ) எங்கே, எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The matter is still under consideration.

SRI A. VEDARATHNAM : இந்த விவசாயக் கல்லூரியை தஞ்சையில் ஆரம்பிக்கவேண்டும் என்றும், அதற்கு ஜில்லா போர்டிலுள்ள ரயில்வே செஸ் நிதியை பயன் படுத்திக்கொள்ள

[27th March 1961

லாம் என்றும் அங்குள்ள ஜில்லா போர்டிலிருந்து கோரிக்கை வந்திருக்கிறதா? அப்படியானல் அது பரிசீலிக்கப்பட்டிருக்கிறதா? அதன் முடிவு என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அவ்விதம் ஒன்றும் வந்ததாகத் தெரியவில்லை. ரயில்வே செஸ் நிதி அப்படியொன்றும் அட்சயபாத்திரம் அல்ல. அதிலுள்ள உதவியைக் கொண்டுதான் மெடிக்கல் காலேஜ் துவங்கப்பட்டிருக்கிறது. விவசாய கல்லூரி நடத்துவதற்கும் இதில் பணம் இருக்கும் என்று சொல்லுவதற்கில்லை.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN: சிதம்பரத்தில் விவசாயக் கல்லூரி ஏற்கனவே இருந்து வருவதால், தென் ஜில்லாக்களுக்கு எல்லாம் பொதுவாக இருக்கும் மதுரை ஜில்லாவில் இந்த விவசாயக் கல்லூரியை ஆரம்பிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இதுவும் சர்க்காரின் யோசனையில் இருந்து வருகிறது.

SRI N. R. THIAGARAJAN: 'சோழவள நாடு சோறுடைத்து' என்றிருப்பதால் தஞ்சையில் விவசாயக் கல்லூரி தேவையில்லை. முத்துடைய பாண்டிய நாட்டை தேர்ந்தெடுத்து மதுரையில் இந்த விவசாயக் கல்லூரியை ஸ்தாபிக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: முத்துடைய நாடு பாண்டிய நாடு என்ருல் அங்கே விவசாயக் கல்லூரியே தேவையில்லை என்று சொல்லிவிடலாம். மதுரையிலும் விவசாயத்தில் கவனம் செலுத்தக்கூடிய மக்கள் இருக்கிருர்கள். ஆகவே அங்கும் வைக்கலாமா என்று சர்க்கார் ஆலோசித்துக்கொண்டிருக்கிறது.

SRI A. MARIAPPAN: இந்த விவசாயக் கல்லூரியை சேலத்தில் நிறுவ அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஒவ்வொருவரும் தங்கள் ஜில்லாவில் அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிருர்கள். இதிலிருந்து எவ்வளவு ஆர்வம் இருக்கிறது என்பதை நம்மால் பார்க்க முடிகிறது. இப்போது எங்காவது ஒரு ஜில்லாவில்தான் ஏற்படுத்த முடியும்.

*Woolly sheep (import)*

* 1116 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் உரோமம் அதிகமாக கொடுக்கும் ஆடுகள் உள்ளனவா?

27th March 1961]

*(இ) இல்லையென்றால், அப்படிப்பட்ட ஆடுகளை மற்ற ராஜ்யங்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் கொண்டுவர உத்தேசமுண்டா ?*

*(உ) எங்கெங்கேயிருந்து கொண்டுவரப்படும் ?*

THE HON. SRI M. BHAKTAVATCHALAM : (அ) Yes, Sir. Fine white woolly sheep are available in Nilgiris. Mixed coloured woolly sheep, black woolly sheep and coarse white woolly sheep are available in some parts of the State, notably in Coimbatore district.

(இ) & (உ) The local breeds require improvement for obtaining increased yield and white wool. Woolly breeds from Rajasthan have therefore been imported for upgrading the local sheep in the Sheep and Wool Extension Centres of this State. Foreign breeds like the Romney Marsh breed of sheep have been imported from abroad for use in the Sheep Farm, Ootacamund. The Indian Council of Agricultural Research has been addressed for the import of certain other varieties of foreign sheep noted for fine wool which may probably be imported from countries like Australia, New Zealand, etc.

**SRI V. K. KOTHANDARAMAN :** *ஸார், மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் எத்தனை செண்டர்களில் இது போன்ற வேலைகள் ஆரம்பிக்க உத்தேசமிருக்கிறது ? எங்கெங்கு ஆரம்பிக்கப்படும் ?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் இன்னும் 12 ஷீப் அன்ட் வூல் எக்ஸ்டென்ஷன் செண்டர்கள் அமைக்கப்படும். இதற்காக ஐந்து லட்சம் ரூபாய் செலவாகும் என்று திட்டம் போடப்பட்டிருக்கிறது. 1961-62-ல் மூன்று செண்டர்கள் வைப்பதாக உத்தேசமிருக்கிறது. இதை கனம் அங்கத்தினர் அவர்கள் வரவு செலவு திட்டத்தில் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறேன்.*

**SRI R. SRINIVASA IYER :** *ஸார், நீலகிரி ஜில்லாவில் ரோம்னிவுல் நல்ல முறையில் உற்பத்தி செய்து வந்தாலும், இது கோர்ஸ் வுல்லாகத்தான் இருக்கிறது. ஆகவே* Cheirot sheep-*ஐ அதிகமாகவரவழைத்து வளர்க்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *இதெல்லாம் அப்போதைக்கப்போது ஆராய்ச்சி செய்யப்படுகிறது, பரிசிலனை செய்யப்படுகிறது, அதனுடைய முடிவுகளுக்கு தக்கபடி நடவடிக்கைகளும் எடுக்கப்படுகிறது. இதைப்பற்றிய விவரங்களுக்கு தனியாக கேள்வி போடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.*

SRI A. A. RASHEED : After the import of wool sheep, will the work of wool-gathering be increased?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : That is for the hon. Member to Judge.

[27th March 1961

SRI K. VINAYAKAM: With the object of increasing the output of wool in our State, Government have been importing sheep from Rajasthan and foreign countries. How are their powers of procreation to increase suitable breeds? Are they congenial to our weather?

THE HON SRI M. BHAKTAVATSALAM: I may tell the hon. Member that they are quite all right.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR**: ஸார், இப்போது சேலம் ஜில்லாவிலுள்ள மேய்ச்சேரியில் ஆடுகள் அதிகமாக பயன்படுகின்றனவா? அங்கு நீண்ட ரோமமுள்ள ஆடுகளை வரவழைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறதா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: மேய்ச்சேரியில் இருக்கின்ற ஆடுகள் அதிகமாகவும் மாமிசத்திற்குத்தான் பயன் படுகின்றன.

*Last grade servants (discharge)*

*** 1117 Q.—SRI V. K. KOTHANDARAMAN**: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) சென்னை சர்க்கார் கடைநிலை ஊழியர் சங்கம், குடியாத்தம் கிளை சார்பில் கடைநிலை ஊழியர்களை வேலையிலிருந்து நீக்குவதுபற்றிய தீர்மானம் ஏதேனும் சர்க்காருக்கு அனுப்பப் பட்டதா?

(இ) அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No Sir.

(இ) Does not arise.

*Radios in buses (accidents)*

*** 1118 Q.—SRI V. K. KOTHANDARAMAN**: கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 28–1–61-ல் 207-ம் கேள்வியின் பதிலையொட்டி பஸ்களில் ரேடியோக்கள் வைத்ததின் விளைவாக எத்தனை விபத்துக்கள் ஏற்பட்டன?

(இ) உயிர் சேதம் ஏதாவது ஏற்பட்டதா?

THE HON. SRI V. RAMAIAH: (அ) & (இ) No information is available. It is considered that radio sets, if installed in buses will be a very likely cause of accidents.

**SRI V. K. KOTHANDARAMAN**: ஸார், கனம் அமைச்சர் அவர்கள் பஸ்களிலே ரேடியோ வைப்பதன் காரணத்தினால் பஸ் விபத்துக்கள் ஏற்படுகின்றன என்று கூறி, அதனால் தான் இந்த ரேடியோக்களை வைக்கக்கூடாது என்று போட்டிருப்பதாகக் கூறினார்கள். ஆகவே இப்போது பதிலில் அந்த மாதிரி தகவல்

27th March 1961]

இல்லையென்றும் சொல்லும்போது இதனால் பஸ் விபத்துக்கள் ஏற்படவில்லை என்று ஏற்படுகிறது. ஆகவே, மீண்டும் பஸ்களில் ரேடியோக்களை வைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : இதில் நன்றாக அரசாங்கம் பரிசீலனைசெய்து தான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது—இப்போது பஸ்களில் ரேடியோ வைப்பதில்லை என்று.

SRI S. NAGARAJA MONEGAR : இது விபத்துக்களுக்குக் காரணமாக இருக்கும் என்று சர்க்கார் கருதுகிறது. ஆகையால் பஸ்கள் மாதிரி சொந்தக் கார்களிலும் ரேடியோ வைப்பதைத் தடுக்க வேண்டிய நடவடிக்கைகளைச் சர்க்கார் எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது பஸ்களில்—பொது மக்கள் பிரயாணம் செய்யக் கூடிய வாகனங்களில்தான்—ரேடியோ வைப்பதற்குத் தடை இருக்கிறது. கார்களைப் பொருத்த வரையில், அது தனியார் போகக்கூடிய போக்குவரத்து வசதி. விபத்துக்கள் ஏற்படாமல் மிகவும் ஜாக்கிரதையாக பார்த்துக் கொள்வார்கள். எப்போது வைக்கலாம், எப்போது நிறுத்த வேண்டும் என்பதெல்லாம் அவர்களுக்கே விடப்பட்டிருக்கிறது.

*Shooting of film (Sathanur Dam)*

* 1119 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சாத்தனூர் அணைக்கட்டில் சினிமாப்படம் எடுக்க இலவசமாக அனுமதிக்கப்படுகிறதா அல்லது கட்டணம் உண்டா?

(இ) எவ்வளவு கட்டணம் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) Shooting of films in Dam is allowed by Government on payment of a prescribed charge.

(இ) Rs. 250 per day.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இந்த சினிமா படங்களை எடுத்து கொள்ளை லாபம் சம்பாதிக்கக் கூடியவர்களாக இருக்கிறார்கள். ர்க்காருக்கு வருமானம் வரக்கூடிய இந்த முறையிலே மேலும் அபிவிருத்தி செய்து அதிகப்படி கட்டணம் ஏற்படுத்துவதற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : அந்த உத்தேசம் இருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : சினிமா படங்களுக்கு அத்தகைய சீனரி ரொம்ப முக்கியம். அதைக் கொண்டுதான் இந்த சினிமா படங்களின் விமரிசை ஜாஸ்தியாகி, வரும்படி அதிகமாக வருகிறது. ஆகையால் தினம் ஒன்றுக்கு இவ்வளவு என்று போடாமல், இந்த சினிமா எங்கே போடப்பட்டாலும் வரக் கூடிய வரும்படியில் இவ்வளவு பர்ஸெண்டேஜ் கொடுக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்யலாமா ?

THE HON. SRI P. KAKKAN : அந்த உத்தேசம் அரசாங்கத்திற்கு இப்போது இல்லை.

[27th March 1961

**SRI V. K. KOTHANDARAMAN:** ஸார், சாத்தனூர் டாமில் தண்ணீருக்கு மத்தியில் சிறு மலை ஒன்று இருக்கிறதே அதன்மேல் சிறிய பங்களா கட்டினால் படம் எடுக்க நல்ல வாய்ப்பு ஏற்படும், ஒரு நல்ல வ்யூ உண்டாகும். அந்த முறையில் அங்கே ஒரு கட்டிடம் கட்டும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா?

**THE HON. SRI P. KAKKAN:** இப்போது அந்த உத்தேசமும் இல்லை.

**SRI K. VINAYAKAM:** இந்த ஸ்டுடியோக்களில் வாடகைக்குத் தருவது ஒரு ஷூட்டிங் ஃப்ளோருக்கு மினிமம் 500 ரூபாய் நான்கு மணி நேரத்திற்கு என்று இருக்கும்போது, நமது சாத்தனூர் டாமை கண்ணம்பாடி டாமைப்போல அழகாக அமைத்திருப்பதால், அவுட்-டோர் ஷூட்டிங்குக்கு ஒரு நாளைக்கு 1,000 ரூபாய் வசூல் செய்யப்பட்டாலும் அந்த முதலாளிகள் கொடுக்கத் தயங்கமாட்டார்கள். 250 ரூபாயிலிருந்து 1,000 ரூபாயாக உயர்த்திப் பார்த்து லாபம் வந்தால் வைத்துக்கொள்ளலாம், இல்லையென்றால் மறுபடியும் குறைத்து விடலாம். அதைச் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா?

**THE HON. SRI P. KAKKAN:** நாங்கள் இன்றைக்கு 250 ரூபாய் வாடகை என்று நிர்ணயம் செய்திருக்கிறோம். இதைக் காட்டிலும் ஓரளவு உயர்த்தலாமா என்று அரசாங்கம் பிரதம நீர்ப்பாசன என்ஜினியரைக் கேட்டிருக்கிறது. மைசூர் பிருந்தாவனத்தில் எவ்வாறு வாடகை பெறுகிறார்கள் என்று அந்த அரசாங்கத்தின் அபிப்பிராயத்தையும் கேட்டிருக்கிறது. பின்னர் தான் ஒரு முடிவுக்கு வர முடியும்.

**SRI K. B. S. MANI:** இந்த சினிமா படங்கள் பிடிப்பது சாத்தனூர் அணைக்கட்டில் மட்டுமல்லாமல் மஹாபலிபுரத்திலும் பிடிக்கப்படுகிறது. அங்கே கெஸ்டுகளுக்காக கட்டப்பட்டிருக்கிற கெஸ்ட் ஹவுஸிலே ட்ரயல்ஸ் நடத்துவதற்காக பழகிக் கொள்வதற்காக அங்கே தங்குகிறார்கள். மஹாபலிபுரத்தில் ஸ்டண்ட் படம் பிடிக்க அங்கே வந்து மத்திய சர்க்காரிடத்தில் பர்மிஷன் பேரில் இனாமாக படம் பிடிக்கிறார்கள். நீலகிரி போன்ற இடங்களில் கூட இந்த மாதிரி படம் பிடிக்கிறார்கள். எங்கு படம் பிடித்தாலும் இவ்வளவு கொடுக்கவேண்டும் என்று நிர்ணயித்து, அதை வசூலித்தால் அந்த வருமானத்திலிருந்து மக்களுடைய வரிப் பளுவை குறைக்க சௌகரியமாக இருக்கும். இந்த உத்தேசத்தோடு எங்கு இயற்கை காட்சிகளை படம் பிடிப்பதானாலும் இவ்வளவு கட்டணம் கொடுக்கவேண்டும் என்று விதிக்கப்படுமா?

**THE HON. SRI P. KAKKAN:** சாத்தனூர் டாமைப் பற்றிய கேள்வி இது. கனம் அங்கத்தினர் வேறு அபிப்பிராயத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறார். அதைப் பற்றி தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

27th March 1961]

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN: சாத்தனூர் டாமில் எத்தனை ஸ்டூடியோக்கள் வந்து படம் பிடிக்கிறது? டிமான்ட் எந்த அளவில் இருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN: அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை. டிமான்ட் ஜாஸ்தியாகத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: இந்த 250 ரூபாய் என்பது படம் எடுப்பதற்கு மாத்திரமா? அல்லது வரக் கூடியவர்கள் தங்குவதற்காகக் கொடுக்கப்படும் கட்டணம் உட்படவா?

THE HON. SRI P. KAKKAN: ஒரு நாளைக்கு 250 ரூபாய் என்ற தகவல் இருக்கிறது. தங்குவதற்கு தனியாகத்தான் வாடகை கொடுக்கவேண்டுமென்று நினைக்கிறேன். கட்டிடங்களில் தங்கினால் வாடகை கொடுக்கவேண்டும்.

SRI J. MATHA GOWDER: நீலகிரியைப் பொருத்தவரையில் உதகைக்கு சினிமா படம் எடுக்க வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. உதகைக்கு வரக்கூடியவர்களை வரவேற்கத்தான் நாங்கள் எப்போதுமே தயாராக இருக்கிறோமே. ஆகையால் அங்கு வருகின்றவர்களுக்கு எந்தவித கட்டணமும் விதிக்காமல் அவர்கள் இஷ்டம் போல் படம் எடுக்க அரசாங்கம் அனுமதி அளிக்குமா?

THE HON. SRI P. KAKKAN: அதுதான் நான் சொன்னேன். பரிசீலனை செய்துதான் பார்க்கவேண்டும்.

*Birds sanctuary (near Sathanur dam)*

*1120 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சாத்தனூர் அணைக்கட்டுக்குப் பக்கத்தில் உள்ள காட்டில் ஒரு பறவை சரணாலயம் ஏற்படுத்த உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN: சாத்தனூரில்கூட வேடந்தாங்கலில் இருக்கும் பறவை விதங்களில் மூன்றுவித பறவைகள் உள்ளன என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? ஆகவே அங்கேயும் பறவைகள் சரணாலயம் ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா? இல்லை என்றால் காரணம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பறவை இல்லாத கிராமம் இல்லை—நகரமும் இல்லை. அதிலும் தேக்கம் இருக்கும் இடத்தில் பறவைகள் பறந்து கொண்டுதான் இருக்கும். கனம் அங்கத்தினர் பார்த்திருப்பார்கள் வேடந்தாங்கலில் பலவித பறவைகள் இருக்கின்றன. குழந்தைகள் கேட்கிற மாதிரி ஒவ்வொரு இடத்திலும் எங்களுக்குச் சரணாலயம், சரணாலயம் என்று சொல்வது முறையல்ல.

SRI S. NAGARAJA MONIGAR: சாத்தனூரில் பறவைகள் சரணாலயம் மற்றும் படம் பிடிக்க தனியாக கட்டிடம் கட்ட வேண்டும் என்று கனம் அங்கத்தினர் கேட்டிருக்கிறார். ஏழைகள்

பாடுபடும்போது, ஆடம்பரங்கள், ஆடம்பரச் செலவுகள் கூடாது என்று சொல்லுவார்களே, எப்போது இந்த மாதிரி மாறியிருக்கிறார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: காக்கை குருவி எங்கள் ஜாதி என்ற அபிப்பிராயத்தைத்தான் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

SRI K. VINAYAKAM: Sir, is it not a fact that by human efforts no bird sanctuary could be built by itself? It is only the natural surroundings that could help for such a sanctuary coming up. If so, is it possible for us to construct a bird sanctuary at a place where we like and to tempt even the communists birds from Russia and China to take shelter in our bird sanctuaries?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The bird sanctuaries can be organized only in places, as pointed out by the hon. Member, with a natural surrounding where a large number of birds congregate. At Vedantangal a large number and a large variety of birds come.

DEPUTY SPEAKER: Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ADJOURNMENT MOTION *RE* THE FAILURE OF THE GOVERNMENT TO CHECK THE RISE IN PRICES OF FOOD ARTICLES.

DEPUTY SPEAKER: The hon. Member, Sri N. K. Palanisami has given notice of an adjournment motion to discuss the failure of the Government to check the rise in prices of food articles in hotels.

I am asking whether the Hon. Minister is making any statement.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அன்று விலைவாசிபற்றி ஒரு அவசரப் பிரேரணை வந்தபோது தாங்கள் ரூலிங் கொடுத்தீர்கள். இப்போது ஹோட்டலைப்பற்றி முக்கியமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது அவசரப் பிரேரணைக்கு உரியது அல்ல என்று நான் நினைக்கிறேன். சென்னை நகரத்தைப் பொருத்த மட்டில் சிவில் சப்ளைஸ் கமிஷனரை நகரத்திலுள்ள ஹோட்டல்காரர்களைக் கூப்பிட்டு விசாரணை செய்து எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளச் சொல்லியிருக்கிறோம். அதே மாதிரி ஜில்லா தலைநகரங்களைப் பொருத்த மட்டில் கலெக்டர்களை விட்டு ஹோட்டல் சொந்தக்காரர்களைக் கூட்டி விசாரித்து வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி இன்னும் விவரம் வேண்டுமானால் கனம் அங்கத்தினர் ஒரு அவசரக் கேள்வி போட்டால் இன்னும் விவரங்கள் கொடுக்கலாம். இது அவசரப் பிரேரணைக்கு உரியது அல்ல என்று சொல்லிக்கொள்கிறேன்.

27th March 1961]

DEPUTY SPEAKER: I think there is no need for the adjournment motion. The Hon. Minister has explained the position very clearly. The hon. Member can put a short notice question if he likes. Therefore I rule it out of order. 9–30 a.m.

III. VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961–62

DEMAND VI—GENERAL SALES TAX AND OTHER TAXES

DEPUTY SPEAKER: We shall now take up the next item, viz., Voting on Demands for Grants for the year 1961–62. We may take up Demand VI—General Sales Tax and Other Taxes and Duties Administration. Two hours have been allotted for the discussion on this demand.

SRI V. K. KOTHANDARAMAN: *ஸார், இந்த மான்யத்தின்மீது விவாதம் ஆரம்பிப்பதற்கு முன்னால் ஒரு விண்ணப்பம். கூட்டுறவுக்கு இரண்டு மணி நேரமும், விற்பனை வரிக்கு ஒரு மணி நேரமும் விவாதமிருந்தால் நல்லது என்பது என்னுடைய அபிப்பிராயம்.*

DEPUTY SPEAKER: As the allotment of time for the discussion of the various demands had already been decided, I am sorry it is not possible to change it at this stage.

* THE HON. SRI R. VENKATARAMAN: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 62,41,200 under Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration."

*கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையைப்பற்றி நான் சில புள்ளி விவரங்கள் கொடுத்துவிட்டு, அதைக் குறித்து பொதுவான விவரங்கள் எல்லாவற்றையும் பதில் அளிக்கின்ற சமயத்திற்கு ஒதுக்கி வைத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நம்முடைய ராஜ்யத்தில் விற்பனை வரி கணிசமாக உயர்ந்திருக்கிறது. அதனால் வருவாய் உயர்ந்திருக்கிறது. இதில் எந்தவிதமான மாறுதலும் செய்யாமல் வரி விதிப்பு அதிகரிக்காமல், அதிகமான வருவாய் வந்திருப்பது நம்முடைய ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கிற வர்த்தக-வாணிப முன்னேற்றத்திற்கு ஒரு அறிகுறியாக இருக்கிறது. 1956-57-ம் ஆண்டில் நமக்கு பொது விற்பனைவரி வருமானம் 11 கோடியே 16 லட்சம் ரூபாய். 1960-61-ல் நமக்கு ரிவைஸ்ட் எஸ்டிமேட் பிரகாரம் கிடைக்க இருப்பது 13 கோடியே 67 லட்சம் ரூபாய். அதேபோல மத்திய வருவாயை எடுத்துக் கொண்டால், நமக்கு 1957-58-ல் 57 லட்சத்து 22 ஆயிரம்தான் கிடைத்தது. 1960-61-ல் 215 லட்சம் கிடைக்கும், அதாவது 2 கோடியே 15 லட்சம் ரூபாய் கிடைக்குமென்று எதிர்பார்க்கிறோம். அதில் ஜனவரி மாதம் வரையில் கணக்கெடுத்ததிலே 210 லட்சம் ரூபாய் வந்துவிட்டது. அதனால் ரிவைஸ்ட் எஸ்டிமேட்டைவிட அதிகமாக இருக்குமென்று நாம் எதிர்பார்க்கிறோம். நமக்கு இந்த மத்திய விற்பனைவரி வருவாய் அதிகரித்து வருகிறது என்பது, நம்முடைய ராஜ்யத்தில் இருந்து எந்த அளவுக்குப் பண்டங்கள்*

வேறு ராஜ்யங்களுக்கு அனுப்பப்படுகின்றன என்பதற்கு அது அறிகுறியாக இருக்கிறது. இப்போது மத்திய விற்பனைவரி ஒரு சதவிகிதமாக இருக்கிற காரணத்தால் 1957-58-லே நமக்கு 57 லட்சம்தான் வருவாய் வந்திருக்கிறது என்று சொன்னால், 57 கோடி ரூபாய் மதிப்புள்ள சரக்குகள் நம்முடைய ராஜ்யத்திலிருந்து பிற ராஜ்யங்களுக்கு அனுப்பி இருந்திருக்கிறோம். ஆனால் இன்று ரிவைஸ்ட் எஸ்டிமேட்படி 215 லட்சம் ரூபாய் நமக்கு மத்திய விற்பனைவரி மூலம் வருவாய் வருகிறது என்று சொன்னால், 215 கோடி ரூபாய் மதிப்புள்ள அளவுக்கு பண்டங்கள் நம் ராஜ்யத்திலிருந்து வேறு ராஜ்யங்களுக்குச் செல்லுகின்றன என்பதை இது காட்டுகிறது. ஆகவே, இந்த அதிகமான வருவாய் வியாபார, வணிக, தொழில் துறையில் நம்முடைய ராஜ்யம் எவ்வளவுதூரம் உயர்ந்திருக்கிறது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது.

அதே சமயத்தில் பல வெளிராஜ்யங்களுக்குச் செல்லக்கூடிய சில பண்டங்களுக்கு நாம் சலுகைகள் காட்டியிருக்கிறோம். உதாரணமாக, வெற்றிலை நம்முடைய ராஜ்யத்திலிருந்து வெளி ராஜ்யங்களுக்குச் சென்றால், அதற்கு 7 சதவிகிதம் மத்திய விற்பனை வரி என்றிருந்ததை, இப்போது 1 சதவிகிதம் என்று குறைத்தோம். அதேபோல், நம்முடைய ராஜ்யத்திலிருந்து உருளை கிழங்கு வெளி ராஜ்யங்களுக்குச் செல்வதாக இருந்தாலும், அதற்கும் 1 சதவிகிதம் என்று மத்திய விற்பனைவரியைக் குறைத்திருக்கிறோம். இன்னும் இதேபோல் கைத்தறி ரெடிமேட் ஆடைகள் நம் ராஜ்யத்திலிருந்து பிறராஜ்யங்களுக்கு செல்வதாக இருந்தாலும், அதற்கும் 1 சதவிகிதமாக மத்திய விற்பனை வரியைக் குறைத்திருக்கிறோம். இன்னும் கைத்தறி துணியால் தலையணை போன்ற சில நல்ல வேலைப்பாடுள்ள சாமான்கள் எல்லாம் செய்யப்படுகின்றன. இவையெல்லாம் இந்த 7 சதவிகிதம் மத்திய விற்பனை வரியிலிருந்து குறைக்கப்பட்டு இருக்கிறது. ஆகவே, நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டால், என்னென்ன பண்டங்களுக்கு எந்தெந்த முறையில் விற்பனைவரி விதிக்கப்பட்டிருக்கிறது, எந்தெந்த ராஜ்யங்களில் எந்தெந்த பண்டங்களுக்கு எல்லாம் லோகல் வரி விதிக்காமல் இருக்கிறார்கள் என்பதை கவனித்து, அந்தப் பண்டங்களுக்கு எல்லாம் குறைத்து 1 சதவிகிதம் என்ற நிலைமையை உண்டாக்கி இருக்கிறோம்.

அடுத்தாற்போல், நமக்கு பெட்டிங் டாக்ஸ் வருமானமும் அதிகரித்திருக்கிறது. 1956-57-ல் இதிலிருந்து நமக்கு 12,64,000 ரூபாய் கிடைத்தது. 1960-61-ல் ரிவைஸ்ட் எஸ்டிமேட்படி 24,47,000 ரூபாய் கிடைக்குமென்று நாம் எதிர்பார்க்கிறோம். ஆகவே, இந்த பெட்டிங் டாக்சில் நமக்கு இரட்டிப்பு வருமானம் வருகிறது.

அடுத்தாற்போல், நமக்கு மோட்டார் ஸ்பிரிட்டில் வருகின்ற வருமானத்தை எடுத்துக்கொண்டால், 1956-57-ல் 1 கோடியே 14 லட்சம் ரூபாய் கிடைத்தது. 1960-61-ல் இது 2 கோடியே 20 லட்சமாகி இருக்கிறது. ஆகவே, இந்த வருவாயிலும் பெரிய அளவுக்கு

27th March 1961] [Sri R. Venkataraman]

நாம் உயர்ந்திருக்கிறோம். அதோடு, டீசல் எண்ணெய் நம்முடைய ராஜ்யத்தில் இப்போது அதிகமாக உபயோகிக்கின்ற காரணத்தால், அதிலும் அதிகப்படியான வருவாய் வருமென்று நம்புவதற்கு ஏதுவாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதேபோல், என்டர்டைன்மெண்ட் டாக்ஸ் கட்டணம் நன்கு உயர்ந்து இருக்கிறது. 1957-58-ல் நமக்கு 1 கோடியே 25 லட்சம் ரூபாய் கிடைத்தது. இப்போது 1960-61-ல் 1 கோடியே 92 லட்சம் ரூபாய் கிடைக்க இருக்கிறது. இந்த வருமானத்தை ராஜ்ய சர்க்கார் எடுத்துக்கொள்வதில்லை. இதையெல்லாம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு பங்கிட்டு கொடுத்துவிடுகிறோம். இப்படி இதை பங்கிட்டு எடுத்துக்கொண்டதைப் பார்த்தால், 1957-58-ல் 1 கோடியே 1 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறோம். 1960-61-ல் 1 கோடியே 60 லட்சம் கொடுத்திருக்கிறோம். ஆகவே ஒவ்வொரு துறையிலும் சற்றேறக்குறைய இரட்டிப்புக்கு அதிகமான வருவாய் வந்தாலும், செலவுகள் அதிகரிக்கவில்லை என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். உதாரணமாக, 1957-58-ம் வருஷத்தில் நமக்கு மொத்த செலவானது எவ்வளவு என்று பார்த்தால், இந்த சர்க்காருக்கு 50 லட்சம் ரூபாய்தான் ஆகியிருக்கிறது. இன்றைக்கு பே கமிஷன் மூலமாக 1960-61-ல் 53 லட்சத்து 57 ஆயிரம் ரூபாய்தான் ஆகியிருக்கிறது. ஆகவே, நிர்வாகச் செலவும் அதிகரிக்கவில்லை. இதையும் இந்த நேரத்திலே தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இனி, பொது விவாதத்தின்போது பல அங்கத்தினர்கள் பல பண்டங்களுக்கு வரி வேண்டாமென்றும், நீக்க வேண்டுமென்றும் ஆலோசனையெல்லாம் கூறுவார்கள். அதற்குப் பதில் சொல்லுகின்றபோது, என்னுடைய அபிப்பிராயங்களையும், சர்க்காருடைய தீர்மானங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன் என்று சொல்லி, இந்த மான்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 62,41,200 under Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration."

SRI K. SATTANATHA KARAYALAR: Sir, I move—

"That the allotment of Rs. 62,41,200 under Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration be reduced by Rs. 100."

DEPUTY SPEAKER: Cut motion moved.

"That the allotment of Rs. 62,41,200 under Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration be reduced by Rs. 100."

The Demand and the Cut Motion are before the House for discussion.

[Deputy Speaker] [27th March 1961

How long will the Hon. Minister take for his reply?

THE HON. SRI R. VENKATARAMAN : I think . . . Sir (Sri M. P. Subramaniam : 15 minutes . . .) Yes, Sir. I will take 15 minutes for the reply. The interruption by the Hon. Member Sri M. P. Subramaniam shows that there will not be much criticism on this Demand.

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மான்ய கோரிக்கை விற்பனை வரியிலே நமது சர்க்காருக்கு கணிசமான ஒரு வருவாய் வரு கின்றது என்பதை, கனம் மந்திரி அவர்கள் மான்ய கோரிக்கையைச் சமர்ப்பித்து, சொல்லும் வாதத்திலே சொன்னார்கள். சுமார் 13 கோடியே 67 லட்சம் ரூபாய் இந்த ஆண்டிக்கு வருவாய் கிடைக்கு மென்று எதிர்பார்க்கப்படுவதாக அவர்கள் குறிப்பிட்டார்கள். இதிலே இன்டர் ஸ்டேட் விற்பனை வரி வருமானத்தைப்பற்றி அவர்கள் கூறும்போது, நம் ராஜ்யத்திலிருந்து பொருள்கள் வெளி நாடுகளுக்குப் போகிறது, அதனால் நல்ல வருமானம் உயர்ந்திருக் கிறது என்றும் குறிப்பிட்டார்கள். அதாவது 240 லட்சம் ரூபாய் கிடைக்குமென எதிர்பார்க்கப்படுவதாகக் குறிப்பிட்டார்கள். இப்படி 240 லட்சம் ரூபாய் கிடைக்கிறது என்றால், நம் நாட்டின் பிற பகுதிகளுக்கு, 240 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொருள் கள் போகின்றது என்று கூறினார்கள். இதைத் தவிர, மற்ற ராஜ் யங்களுக்கு செல்லும் சில இனங்களுக்கு விலக்கு கொடுத்திருப்ப தால், இதைப் பார்க்கிலும் கணக்குக்கு உட்படாமல் பல பொருள் கள் போகின்றது என்பது உண்மை. இதையெல்லாம் பார்க்கு மிடத்து, நமது பொருளாதார வளர்ச்சியினால், பல தொழில்கள் மேலும் வளர்ந்து வருகிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட் டாகும். ஆனால் இந்த சந்தர்ப்பத்திலே நான் சொல்ல அவா வுறுவது, நம் ராஜ்யத்திலே இருந்து. பிற ராஜ்யங்களுக்கு போகின்ற பண்டங்களின் புள்ளிவிவரங்களை வைத்து எந்தெந்தத் தொழிலிலே, அதுவும் எந்தெந்த குடிசைத் தொழில்களிலே வருவாய் வருகிறது? எந்தெந்த தொழில் பல ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கக்கூடியதாக இருக்கிறது, அதில் எல்லாம் எந்த அளவுக்கு நமக்கு இன்டர் ஸ்டேட் விற்பனை வரி வருகின்றது என்பதையெல்லாம் மிக உன்னிப்பாக கவனிக்க வேண்டும். ஏனெனில் வருவாய் வருகிறது என்பதற்காக ஏதோ பொன் முட்டை இடும் வாத்தை வெட்டிப் பார்ப்பது போல இது முடியக்கூடாது. வருவாய் வருகிறது என்பதனால், அது தொழிலைப் பாதிக்கக்கூடிய அளவில் செய்துவிடக் கூடாது. இன்டர் ஸ்டேட் ட்ரேடில் ராஜ்யத்துக்கு ராஜ்யம் பண்டம் மாறுவதால் சில தொழில் பாதிக்கப்படுகிறது என்பது வெள்ளிடைமலை. இதை அமைச்சர் உன்னிப்பாக பரிசீலனை செய்துபார்த்து, இன்னும் அதிகமாக விதிவிலக்குகள் கொடுக்க வேண்டிய அவசியத்தைக் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நமது மாகாணத்திலிருந்து பிற மாகாணங்களுக்கு செல்லும் முக்கியப் பொருள்களிலே, தீப்பெட்டி மிக முக்கியமானது. அது ஒரு

27th March 1961] [Sri K. Sattanatha Karayalar]

குடிசைத் தொழில். அதில் பல ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் வேலைசெய்து கொண்டிருக்கிறார்கள். சுமார் 50,000 தொழிலாளிகள் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள். குறிப்பாக பெண்கள் அதிகமாக இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி முதலிய மாவட்டங்களிலே, பெண்கள் வீட்டிலிருந்துகொண்டே, இதைக் குடிசைத் தொழிலாக நடத்துகிறார்கள்; வீட்டை விட்டு வெளியே போகாத பெண்கள்கூட இந்தக் குடிசைத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆகவே, இதைப் பரிசிலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அகில இந்திய ரீதியில் நம் மாநிலத்தில் இருப்பதைப் போல வேறு எந்த இடத்திலும் இவ்வளவு பெரிய அளவில் குடிசைத் தொழிலாக வளர்ந்திருக்கவில்லை. பிற மாநிலங்களில், பெங்கால், டெல்லி போன்ற இடங்களில் இப்பொழுதுதான் அது வளர்ந்துகொண்டிருக்கிறது. அகில இந்திய ரீதியில் "விம்கோ" கம்பெனி இயந்திரத் தொழில் மூலமாக உற்பத்தி செய்கிறார்கள். வெளி நாட்டு மூலதனத்தோடு இயங்கும் இந்த தொழிற்சாலைகளில் 1,000 தொழிலாளர்கள்தான் வேலை பார்க்கிறார்கள். ஆனால், இந்தக் குடிசைத் தொழிலில் சுமார் 50,000 தொழிலாளிகள் ஈடுபட்டிருக்கிறார்கள். இயந்திரத் தொழிலில் கிட்டத்தட்ட நாட்டின் உற்பத்தியை செய்கிறார்கள். ஆகவே, இவர்களின் நிலையைப் பற்றி உன்னிப்பாகக் கவனிக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

ஒரு கிரோஸ் தீப்பெட்டி செய்ய ரூ. 2 ஆகிறது; அதற்கு எக்ஸைஸ் முறையில் ரூ 4.72 தீர்வை விழுகிறது; ஆக ரூ. 6.72 அதன் மொத்த தன்னடக்கம் ஆகிறது. நம் மாநிலத்திலிருந்து வெளியேற ஒரு சதவிகிதம் தீர்வை என்று வந்தால், மொத்தத்தில் இதற்கு கிட்டத்தட்ட 7 சதவிகிதம் அல்லது 6.72 பர்செண்ட் வருகிறது. இதனால், கணிசமாக பிற மாவட்டங்களுக்குப் போகும் போது இத்தொழில் பாதிக்கப்படுகிறது. ஆனால், "விம்கோ" சம்பந்தப்பட்டவரை, இந்தத் தீர்வை அவர்களுக்கு வருவதே கிடையாது. அதற்கு அவர்களுக்குப் பிரத்தியேகமான வாய்ப்பும் வசதியும் இருக்கின்றன. அவர்களுக்கு இந்த வரி விதிப்பு வருவதில்லை. வேறு இடங்களிலுள்ள தங்கள் கோடவுன்களுக்குக் கொண்டு போகும்போது, அவர்கள் அதை "டிரான்ஸ்பர் ஆப் குட்ஸ்" என்ற முறையில், பண்டம் மாற்றுதல் என்ற இனத்தில் செய்து விடுகிறார்கள். வியாபாரம் என்று நடந்தால்தான் அவர்களுக்கு விற்பனை வரி ஏற்படும். ஆகவே அவர்கள் இப்படி வரியிலிருந்து தப்பிவிடுகிறார்கள். ஆகவே, சுமார் 7 பர்செண்ட் எக்ஸைஸையும் சேர்த்து வரும் தீர்வையிலிருந்து அவர்கள் தப்புகிறார்கள். அகில இந்திய ரீதியில், அவர்களோடு நம்மவர் போட்டி போடும் சக்தியற்றவர்களாக இருக்கிறார்கள். நம்மவரில் சிலர் பணக்காரர்களாக இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் அவர்களுக்கு இந்த தீப்பெட்டி ஒரு முக்கிய தொழிலாக இராது; வேறு க்ராக்கர்ஸ் பட்டாஸ் போன்ற இதர இனத்தில் ஏற்படக்கூடிய லாபத்தினால், இவர்கள் பெரும் பணக்காரர்களாகத் தோன்று

கிறார்கள். ஆதலால் பரவலாகப் பார்த்து இந்தத் தொழில் மிக்க ஆதாயம் உள்ளது என்று நினைக்கக்கூடாது. இந்த தொழிலாளர்கள் நிலைமை ரொம்ப மோசமாக இருக்கிறது. இது போன்ற தீர்வை இனத்திலிருந்து குடிசை தீப்பெட்டி விஷயத்தில், விதி விலக்கு கொடுக்க வேண்டும். இதை மத்திய சர்க்கார் வரி என்று சொல்லக்கூடும். உண்மை. ஆனால் இந்த அவையில் ஒன்றைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். மத்திய சர்க்கார் வரி விதிப்பில், செண்ட்ரல் ஸேல்ஸ் டாக்ஸ் ஆக்ட், 1956, எட்டாவது விரிவில்:

"Notwithstanding anything contained in this section, the State Government, may, if it is satisfied that it is necessary so to do in the public interest, by notification in the Official Gazette, direct that in respect of such goods or classes of goods as may be mentioned in the notification and subject to such conditions as it may think fit to impose, no tax under this Act shall be payable by any dealer having his place of business in any State territory in respect of the sale by him from any such place . . ."

என்று விலக்குக் கொடுக்கக்கூடிய விதி நமது சர்க்கார் கையில் அதிகாரத்தை கொடுக்கிறது. அப்படிக் கொடுத்திருப்பதின் நோக்கம், அந்தந்த ராஜ்யங்களில் என்னென்ன தொழில்கள் இருக்கின்றனவோ, எந்தெந்த தொழில்களுக்கு விதிவிலக்கு அளிக்க வேண்டுமோ அவற்றை அந்த சர்க்கார் பரிசிலனை செய்து, வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு தான். ஆகவே இதை அவசியம் சர்க்கார் கவனிக்கவேண்டும் என்று பணிவோடு வேண்டிக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, வரிவிதிப்பில் கம்பௌண்டிங் ரூ. 50,000 வரை என்று உயர்த்தியிருப்பதை வரவேற்கிறேன். ஆனால், 25,000-க்கு மேல் 5,000, ஒரு ஸ்லாபாக வைத்திருப்பதால் அது பல துறைகளில் பாதிக்கும். அதை 25,000-க்கு மேல், 35,000 ஒரு ஸ்லாபாகவும், 50,000 ஒரு ஸ்லாபாகவும், ஆக இரண்டே ஸ்லாபாக இருந்தால், சௌகரியமாக இருக்கும். இதிலே, வரம்பு, எக்ஸெம்ஷன், 10,000 என்றிருக்கிறது. அது பழைய வரம்பு. விலைவாசிகள் உயர்ந்திருக்கும் இந்த நாளில், 10,000 என்றிருப்பது சில்லரை வியாபாரிகளையும் பாதிக்கும், அவர்களும் இந்த மட்டத்தில் வந்துவிடுவார்கள். ஆகவே 25,000 என்று உயர்த்த வேண்டும் என்று கூற விரும்புகிறேன்.

அடுத்தபடியாக தனி நபர்கள் செய்யும் சில பண்டங்களுக்கு விலக்கு இருந்தாலும், அவர்கள் கூட்டுறவு சங்கமாகச் சேர்ந்து வியாபாரம் செய்யும்போது வரிக்கு உள்ளாகிறார்கள். உதாரணமாக, மண் பாண்டத் தொழிலை எடுத்துக்கொண்டால், அதிலே இன்றைக்கு தனி நபர்களாக இருந்தால் அவர்களுக்கு 10,000 வரை விலக்கு இருக்கிறது. ஆனால், அவர்களே கூட்டுறவு ஸ்தாபனமாக சேர்ந்து செய்தால், 10 பேர் சேர்ந்து செய்தால், அது வரிக்கு, உட்பட்டுப் போகிறது. ஒருவர் 5,000-க்குச் செய்வார் என்றால், 10 பேர் சேர்ந்து செய்யும்போது அது கண்டிப்பாக

27th March 1961] [Sri K. Sattanatha Karayalar]

10,000-க்கு மேல் ஆகிவிடும், 50,000-க்கு வந்துவிடும். வரியும் கட்டியாக வேண்டும். இதனால் கூட்டுறவு இயக்கமே பாதிக்கப் படுகிறது. இந்தத் துறையை நன்கு பரிசிலனை செய்துபார்த்து இந்த குடிசைத் தொழில்களுக்கு அவசியம் வரி விலக்குக் கொடுக்கவேண்டும் என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன்.

சிங்கிள் பாயிண்ட், மல்டிபாயிண்ட் டாக்ஸ் என்ற ஒரு முனை பலமுனை இனத்தில் இன்னல்கள் ஏற்படுகின்றன. சில இனத் திற்கு ஒருமுனை வரி பெரிய கஷ்டமாக வந்துள்ளது. பிஸ்கட்டை எடுத்துக்கொண்டால், வீட்டிலே செய்து தலைச் சுமையாக கொண்டு சென்று விற்கும்போதுகூட வரி வருகிறது. அதையே டின்ட் குட்ஸ்-க்கு மாத்திரம் என்று வைத்துவிட்டால் போதாதா என்று பார்க்கவேண்டும். இம்மாதிரிக் குடிசைத் தொழிலாகச் செய்பவர்களுக்கு விதிவிலக்கு அளிக்க மாற்றம் செய்யவேண்டும் என்று கோருகிறேன்.

வறு கடலை போன்றவைகள் பிற மாநிலத்திலிருந்து கடலையாக வருகிறது. இங்கு வறுக்கப்படுகிறது. வரும்போதே வரிவிதித்து விடலாம். அல்லாமல் ஒரு மூட்டை கடலை வாங்கி வறுத்து விற்கிறவன் பாதிக்கக்கூடிய நிலையில் உள்ளதை மாற்றவேண்டும். தேங்காய்க்கு வரி இருக்கிறது. ஆனால் "ப்ரெஷ்" கோகனட் என்று இளநீருக்கு வரி கிடையாது. கொப்பரைக்குப் போடுவது சரியே. ஆனால், சாதாரண மக்களும் கறிக்கு உபயோகிக்கும் தேங்காய்க்கு விலக்கு கொடுக்கவேண்டும். "ப்ரெஷ்" கோகனட் இனத்தில் அதையும் சேர்த்து, அதற்கும் விலக்குக் கொடுக்க வேண்டும். ஆயில் ஸீட்ஸ் என்று வருவதால், இதுபாதிக்கப்படு கிறது. எண்ணெய்க்கு உபயோகமாகும் கொப்பரைக்கு வரி விதிப் பதில் ஆட்சேபணையில்லை. ஆனால், ஏழைமக்களும் உபயோ கிக்கும் தேங்காய்க்கு வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். டாக்டர் லோகநாதன் அவர்கள் ரிபோர்ட்டில்கூட இதைப்பற்றி சொல்லும் போது இதைப் புனராலோசனை செய்யவேண்டுமென்று வலி யுறுத்தி இருக்கிறார்கள். ஆகவே எண்ணெய்க்கு உபயோகமாகும் கொப்பரை சம்மந்தப்பட்ட வரை தனியாகக் கவனிக்கவேண்டும். சாதாரண மக்கள் உபயோகிக்கும் தேங்காய்க்கு விலக்கு அவசியம் கொடுக்கவேண்டும். கேரளாவில் இருக்கக்கூடிய நிலைமை வேறு. அங்கு இந்த வரி பாதிக்காது. கடையில் தேங்காய் வாங்குவோர் குறைவு. அம்மாதிரி நம் மாநிலத்தில் இல்லை.

இன்றைக்கு வரிகள் மூலம் வருவாய் அதிகமாகக் கிடைக்கிறது. ஆதலால் இந்த வரிவிதிப்பினால் குடிசைத் தொழில்கள் பாதிக்கப் படாத முறையில் வரி விதிப்பு அமையவேண்டும். லாபம் வருகிறது, வருவாய் கிடைக்கிறது என்பது ஒன்றை மட்டுமே கண்ணோக்காக வைத்துக் கொள்ளக்கூடாது. இந்த கொள்கை யினால் நம் மாநிலத்தில் இருக்கும் கைத்தொழில்கள் உற்பத்தி

செய்யும் பண்டங்கள் பிற மாநிலங்களில் போட்டிபோடும் சக்தியற்றவைகளாகி வருகின்றன என்பதை இந்த சந்தர்ப்பத்திலே சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

ஆகவே இவைகளையெல்லாம் ஆலோசனை செய்து, தேவைப்பட்ட இனங்களுக்கு வரி விலக்கு அளிக்க முன் வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் விற்பனை வரி மானியத்தை ஆதரித்து என் கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு அமைச்சர் அவர்களுடைய ஆரம்ப உரையில் மத்திய விற்பனை வரி மூலமாக—கிட்டத்தட்ட 2-½ கோடி ரூபாய் என்று நினைக்கிறேன்—கிடைக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதிலே நமக்கு மத்திய விற்பனை வரி மூலமாக அதிகம் பணம் கிடைக்கக்கூடியது தேயிலை. நம்முடைய மாகாணத்திலேயே விற்பனையாகக்கூடிய தேயிலை எல்லாம் சிறிய, சிறிய வியாபாரிகள் தயாரிப்பதுதான். பெரிய பெரிய தோட்ட முதலாளிகள், கம்பெனிகள் தயாரிக்கக்கூடிய தேயிலை வெளி ராஜ்யங்களுக்கும், வெளிநாடுகளுக்கும்தான் அனுப்பப்படுகின்றது. அவர்களுக்கு இந்தமாதிரி வெளியில் அனுப்ப வசதி இருக்கிறது. பணம் முன்னே பின்னே வந்தாலும் பாவாயில்லை. சிறிய, சிறிய தோட்டக்காரர்களுக்கு அந்த வசதி இல்லாததனால் உடனடியாக நம் ராஜ்யத்திலேயே விற்கிறார்கள். இவர்களிடத்தில் போதுமான மூலதனம் இல்லை. பணம் இல்லாத காரணத்தினால், வசதி இல்லாத காரணத்தினால் உடனுக்குடன் நம் ராஜ்யத்திலேயே தேயிலையை விற்கிற இவர்கள் 5 சதவிகிதம் விற்பனை வரி கட்ட வேண்டியிருக்கிறது. ஆனால் வெளி ராஜ்யங்களுக்கு, வெளிநாடுகளுக்கு தேயிலை ஏற்றுமதி செய்கிறவர்கள் ஸி. பாரம் என்று பூர்த்தி செய்துகொடுத்து ஒரு சதவிகிதம்தான் வரி கட்டுகிறார்கள். மொத்தம் நமக்கு மத்திய விற்பனை வரி மூலமாக 2½ கோடி ரூபாய் வருகிறது என்றால் அதில் 1½ கோடி ரூபாய் இந்த 1 சதவிகிதம் விற்பனைவரி கட்டக்கூடிய தேயிலையில் இருந்து வந்துவிடுகிறது. இப்படி இருக்கிற நிலைமையில் இங்கே ஒரு முனை வரி என்பதை பலமுனை வரி என்று மாற்றினால் 2 சதவிகிதம் வரி என்றால்கூட 3 கோடி ரூபாய்க்கு மேல் நமக்கு வருவாய் கிடைக்காதா என்பதை அமைச்சர் அவர்கள் சிந்திக்கவேண்டும்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்வது சரியல்ல. அது தவறான கருத்து. வெளி ராஜ்யங்களுக்கு ஏற்றுமதி செய்கிற சரக்குக்கு ஸி. பாரம் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்துவிட்டால் மத்திய சேல்ஸ் டாக்ஸ் ஒரு சதவிகிதம்தான் வாங்கமுடியும்.

SRI J. MATHA GOWDER : அது தெரியும். ஆகவேதான் இதைப் பலமுனை வரியாகச் செய்துவிட்டால் இங்கே முதல் விற்பனை ஆகிறபோதே 2 சதவிகிதம் என்று ஏன் செய்யக்கூடாது, இதை அமைச்சர் அவர்கள் யோசிக்க வேண்டுமென்றுதான் நான்

27th March 1961] [Sri J. Matha Gowder]

கேட்டுக்கொள்கிறேன். 1959-ம் ஆண்டே இந்தச் சட்டமன்றத்தில் இதைப்பற்றிப் பேசி இதற்குப் பலமுனை வரி கொண்டுவந்தோம். தேயிலைத் தோட்டக்காரர்களாகிய நாங்கள் பலமுனை வரி கொண்டு வாருங்கள் என்று சொன்னோம். சர்க்கார் கொண்டுவந்தார்கள். ஆனால் எங்களிடத்தில் இருந்து தேயிலையை வாங்கி விற்கக்கூடிய இடை வியாபாரிகள் கணக்கு வைத்துக்கொள்வது கஷ்டம் என்பதாகச் சொல்லி முறையிட்டார்கள் என்பதற்காக அந்தச் சட்டம் வாபஸ் பெறப்பட்டது என்பதை இங்கே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இப்போது பச்சைத் தேயிலைக்கு வரி இல்லை யென்று நிர்ணயித்துவிட்டோம். அதற்காக அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். ஆனால் அதே நேரத்தில் இந்தத் தேயிலையைப் பொறுத்தவரையில் ஒருமுனை விற்பனை வரி என்பதை மாற்றி பலமுனை விற்பனை வரி என்று கொண்டுவந்தாக வேண்டும் என்பதை இந்தச் சமயத்தில் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நானும் டீ உற்பத்தி செய்து விற்றுக்கொண்டிருக்கிறேன். பலமுனை வரி கட்ட நாங்கள் தயாராக இருக்கிறோம் என்று சொல்லும்போது செகண்டு செல்லர்கள் கிளர்ச்சி செய்கிறார்கள் என்பதற்காக சர்க்கார் அதை ஏன் கொண்டுவராமல் இருக்கவேண்டுமென்றுதான் கேட்கிறேன். வேண்டுமானால் விற்பனை வரி என்ற ரூபத்தில் இல்லாமல் செண்டிரல் எக்சைஸ் ட்யூடியோடு இணைத்துவிடுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். அஸ்ஸாம் ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்ற காரணத்தினால் மத்திய சர்க்கார் இதை ஏற்கவில்லை என்று சொல்வது சரியல்ல. நம் ராஜ்ய சர்க்காரும், மற்ற ராஜ்ய சர்க்கார்களும் ஒத்துக்கொள்வதனால் இதற்கு மத்திய சர்க்காரை இணங்கும்படியாகச் செய்வது நம்முடைய சர்க்காரின் பொறுப்பு என்பதை வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இதை செண்டிரல் எக்சைஸ் ட்யூடியோடு சேர்த்துவிட்டால் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அங்கத்தினர் மீண்டும் இதைப்பற்றியே சொல்வதனால் அதைத் திருத்த வேண்டியது என்னுடைய கடமை. ராஜ்ய சர்க்கார்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்றால் மத்திய சர்க்காரும்கூடச் சட்டமியற்ற முடியாது.

SRI J. MATHA GOWDER : அது தெரிந்துதான் சொல்கிறேன். நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்கார் சட்டம் இயற்றும் படியாகச் செய்யவேண்டும் என்பதுதான் என் கோரிக்கை. உங்களால் இதைப்பற்றிச் சொல்லி செய்ய முடிந்தால் செய்யுங்கள் என்றுதான் சொன்னேன்

இன்னொன்று. 1959-ம் வருஷத்திற்கு மட்டும் பச்சைத் தேயிலைக்கு சிங்கில் பாயிண்ட் வரி கட்டத்தான் வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்கள். அதை மக்களிடத்திலும் நான் சொல்லியிருக்கிறேன். இப்போது 1961-ம் வருஷம் நடைபெறுகிறது. 1961-ம் வருஷத்திலே 1959-க்குக்

[Sri J. Matha Gowder] [27th March 1961

கட்டவேண்டிய வரியைக் கட்டவேண்டுமென்று உத்தரவு போட்டிருக்கிறோம். ஆனால் அந்த வரி கட்டுவதோடுகூட ரிஜிஸ்ட்ரேஷன் பீஸ் என்று 10 ரூபாய் கட்டவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தப்படுகிறார்கள். ரிஜிஸ்ட்ரேஷன் பீஸ் என்பது அடுத்த ஆண்டு வியாபாரம் செய்வதற்கு இந்த ஆண்டே பத்து ரூபாய் கட்டி ரிஜிஸ்டர் செய்துகொள்வதாகும். இந்த விஷயத்தில் எதற்கு ரிஜிஸ்ட்ரேஷன் பீஸ் என்று எனக்குத் தெரியவில்லை. காரணம் அவர்கள் இனிமேல் வியாபாரம் செய்வதற்கு வரி அல்ல. 1959-லே வியாபாரம் செய்வதற்கு வரி. அதற்கு இப்போது ரிஜிஸ்ட்ரேஷன் பீஸ் என்றால் சட்டப்பிரச்னைகூட எழும். அதற்கு அவசியமே இல்லை. அப்போதே அதை வசூல் செய்திருந்து, வரியும் உண்டென்று செய்திருந்தால் இதை ஆட்சேபிக்கப்போவதில்லை. அப்போது வரியில்லை என்று விட்டுவிட்டு, அப்புறம் சட்டத்தை ஒருவிதமாக வியாக்யானம் செய்து 1961-ம் ஆண்டிலே 1959-ல் அவர்கள் விற்ற பச்சைத் தேயிலைக்கு வரி கட்டவேண்டும் என்கிற போது அந்த வரிப்பணத்தைக் கட்டினால் வாங்கிக்கொள்ளும்படி அதிகாரிகளுக்கு உடனடியாக உத்தரவு போடவேண்டுமே தவிர இப்போது அவர்கள் ரிஜிஸ்ட்ரேஷன் பீசும் கட்டவேண்டும் என்று வற்புறுத்தக்கூடாது என உடனடியாக அவசியம் செய்ய வேண்டும். இதற்குத் தக்க உத்தரவை அமைச்சர் அவர்கள் பிறப்பிக்கவேண்டுமென்று மன்றாடித் தெரிவித்துக்கொள்கிறேன்.

10 a.m. இரண்டாவதாக ஒரு வியாபாரி மாதாந்திர கணக்கு கொடுக்கும்போது ஒவ்வொரு மாதமும் 31-ம் தேதிக்குள் எத்தனை ஆயிரம் என்று ஆபீசுக்கு ஸ்டேட்மென்ட் கொடுக்கவேண்டும். அப்படி ஸ்டேட்மென்ட் கொடுக்கவில்லை என்றால் ஆபீஸ் ரிஜிஸ்டரைப் பார்த்தால் யார் யாரிடமிருந்து மாதாந்திர ரிடர்ன் வரவில்லை என்று தெரியும். அடுத்த மாதம் 5, 6, தேதிக்குள் வரவில்லை என்றால் அவர்களுக்கு நோட்டீஸ் கொடுப்பதுதான் நியாயம். அப்படிச் செய்யாமல் ஒரு மாதத்திற்கு ரிடர்ன் வரவில்லை என்றால் இரண்டு வருஷம் கழிந்த பிறகு 10 ரூபாய் அபராதம் போட்டுவிடுகிறார்கள். நாணயம் உள்ள சிறிய வியாபாரிகூட தவறுதலாக மாதாந்திர ரிடர்னை சாதாரண போஸ்டில் அனுப்பி இருக்கலாம். சேல்ஸ் டாக்ஸ் ஆபீசில் சாதாரண ரிகார்ட் வைத்திருக்கலாம். இந்த முறையிலே இருக்கும்போது இதை தயவு செய்து சிந்தித்துப் பார்க்கவேண்டும். சாதாரணமாக மந்திலி ரிடர்னை அனுப்பவில்லையென்றால், ஏன் அனுப்பவில்லை என்று முதலிலே கேட்டு அதற்குப் பிறகுதான் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டிலே அபராதம் விதிக்கக்கூடிய நிலைமையை உண்டுபண்ண வேண்டும். நானும் வியாபாரி என்ற முறையில் பல ஆயிரக் கணக்கான ரூபாய் விற்பனை செய்கிறேன். நான்கூட......

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் தன் சொந்த அனுபவத்தைச் சொல்லக்கூடாதென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

27th March 1961]

**SRI J. MATHA GOWDER:** நான் வியாபாரி என்ற முறையிலே சொல்லுகிறேன். ஒருவருக்கு ஒரு மாதத்திற்கு ரிட்டர்ன் இல்லை என்று இரண்டு வருஷம் கழித்து மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு 10 ரூபாய் அபராதம் விதிப்பது சரியல்ல என்று கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். என்போன்றவர்களுக்கு இவ்வாறு என்றால் மற்றவர்கள் எப்படித் தவிர்க்க முடியும். இது சின்ன விஷயமாக இருப்பதால் கோர்ட்டுக்கு அழைப்பது என்பது சர்க்கார் பேரிலே வெறுப்பு ஏற்படக்கூடிய நிலைமையைத்தான் உண்டுபண்ணுகிறது. இதனால் பல சிக்கல்களும் ஏற்படுகின்றன. ஆகவே இந்த விஷயத்தில் ஒரு நல்ல முறையைக் கையாளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI A. MARIAPPAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்லப் பிரியப்படுகிறேன். சிறிய வியாபாரிகளுக்கு விதிவிலக்கு கொடுத்திருப்பதை நான் வரவேற்கிறேன். இதுமாதிரி ஹாண்ட்லூம் ரெடிமேட் துணிகளுக்கு ஓரளவுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. கைக்குட்டை, ஜமக்காளம், படுக்கை விரிப்பு முதலியவைகளுக்கு சேல்ஸ் டாக்ஸிலிருந்து விதிவிலக்கு கொடுக்கப்படவில்லை. இந்த ரகங்களுக்குப் பூர்ண விதிவிலக்கு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக, அரிசி, கம்பு போன்ற தான்யங்களுக்கு நகரத்திற்குப் பக்கத்திலே இருக்கக்கூடிய பகுதிகளில் இந்த சிறிய வியாபாரம் செய்யும் பெண்கள் விற்பனைவரி கொடுக்கமுடியாத நிலைமையில் அவர்கள் அதிகாலையில் 6 மணிக்கே வியாபாரத்தை முடித்துவிட்டு தப்பித்துக் கொள்ளுகிறார்கள். அதனால் அவர்கள் குறைந்த விலைக்குக் கொடுக்கமுடிகிறது. நகரங்களிலே இருக்கும் வியாபாரிகளுக்கு உணவு தான்யங்களுக்கு விலக்கு அளிப்பதற்கு முன்வரவேண்டும்.

குறிப்பாக சேலம் போன்ற நகரங்களில் லீ பஜார் பகுதியில் அவர்களுக்குள் கட்டுப்பாடு ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அந்தப் பகுதியில் விற்கக்கூடிய எல்லா தானியங்களுக்கும் விற்பனை வரி விதிக்கப்படுகிறது. அவர்கள் சங்கம் ஏற்படுத்தி நல்லமுறையில் கொடுத்துவருகிறார்கள். ஆனால் இதற்கு முன்பு கட்டுப்பாடற்ற முறையில் இருந்தபோது சில வியாபாரிகள் விற்பனை வரியிலிருந்து தப்பித்துக்கொண்டார்கள். ஆனால் இப்பொழுது அங்கு வியாபாரம் செய்ய வருகிறவர்கள் பாஸ் வாங்கிக் கொண்டு வரவேண்டும். இதைத் தவிர இதற்கு முன் சேல்ஸ் டாக்ஸ் அதிகாரிகள் மாமூல் வாங்கிக்கொண்டிருந்தார்கள். இப்போது கட்டுப்பாடு ஏற்படுத்திய பிறகு அந்த மாமூல் கொடுப்பதில்லை. இதனால் அங்குள்ள அதிகாரிகள் வேண்டுமென்றே தொந்திரவு செய்து கொடுமைப்படுத்தி வருகிறார்கள். கனம் அமைச்சர் அவர்கள் இதற்குத் தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று

கேட்டுக்கொள்ளுகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் ஜில்லாக் களில் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது விற்பனைவரி அதிகாரிகள் எந்தவிதமாக வசூலிக்கவேண்டும், வியாபாரிகளிடத்தில் எந்த விதமாக நடந்துகொள்ளவேண்டுமென்று விளக்கிச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

வியாபாரிகளைப் பொறுத்தவரையில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நல்ல நோக்கத்தோடு ஒத்துழைப்பதற்கு விற்பனை வரியை நல்ல முறையிலே செலுத்தி வந்தார்கள். குறிப்பாக செவ்வாய்ப் பேட்டையில் சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு மூன்று, நான்கு மடங்கு அதிக வரி செலுத்தியிருக்கிறார்கள். இதற்குக் காரணம் சர்க்காருடன் நல்ல முறையில் ஒத்துழைக்க வேண்டுமென்று சர்க்காருக்கு வரி செலுத்திவருகிறார்கள். இன்னும் ஊக்கம் கொடுத்தால் இன்னும் நல்லமுறையில் விற்பனை வரியை செலுத்து வார்கள். இந்த அதிகாரிகள் தவறான போக்கிலே நடப்பதைத் தவிர்க்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று வற்புறுத்த விரும்பு கிறேன்.

கூட்டுறவு முறையில் நடக்கும் குடிசைத் தொழில்களுக்கு கனம் அங்கத்தினர் ஸ்ரீ சட்டநாத கரையாளர் சொன்ன பிரகாரம் விற்பனைவரி விதிவிலக்கு கொடுக்கவேண்டும். கூட்டுறவு முறை யில் நடத்தப்படும் மண்பாண்டத் தொழிலுக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும். ஏனென்றால் இந்தக் கூட்டுறவு முறையில் இருக்கும் சொசைடியில் 15, 20 பேர்கள் இருக்கிற சொசைடியிலும் 'டர்ன் ஓவர்' அதிகமாக இருக்கிறது. ஆகையால் அவர்களுக்கு விதிவிலக்கு கொடுக்கமுடியாத நிலைமை இருக்கிறது. பொதுவாக கூட்டுறவு முறையில் நடத்தப்படும் மண்பாண்டத் தொழில் களுக்கு விற்பனைவரியிலிருந்து விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தத் தொழிலில் ஈடுபட்டவர் களுக்கும் நல்ல வருமானம் கிடையாது. அவர்கள் மிகவும் கஷ்டப்படக்கூடிய நிலைமை இருப்பதனால், அவர்கள் தொழில் வளர்வதற்கு சர்க்கார் நல்லமுறையிலே பரிசீலனை செய்து விதி விலக்கு அளிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். பொதுவாக சிறிய வியாபாரிகளாக இருந்தாலும் சரி, பெரிய வியாபாரிகளாக இருந்தாலும் சரி சர்க்காரைப் பொறுத்தவரை அவர்கள் வரி செலுத்துவதை உணர்ந்து ஒத்துழைத்துக்கொண்டு வருகிறார்கள்.

சிறிய வியாபாரிகள் மிகவும் அவதிப்படுகிறார்கள். ஒருமுறை கணக்கு கொண்டுபோய் காண்பித்தால் அன்றையதினமே முடித்து விடுகிறார்கள். ஆனால் பல மாதங்கள் கழிந்தபின்தான் ஆர்டர் போடப்படுகிறது. ஆறு மாதங்களாகிறது. கணக்கு காண்பித்து பல மாதங்கள் கழிந்தபின்தான் விற்பனை வரி இவ்வளவு செலுத்த வேண்டுமென்ற ஆர்டர் போடப்படுகிறது. அதனால் தவறான பாதையில் செல்வதற்கு இடம் கொடுக்கிறது. ஆகவே, ஆர்டர்கள் உடனுக்குடன் போடப்படவேண்டும். ஆகவே, இந்தமாதிரி கால

27th March 1961] [Sri A. Mariappan]

தாமதமாவதைத் தவிர்க்க வேண்டும். பின்னர் கணக்கு பார்க்கும் போது வியாபாரிகளுக்கான அந்தஸ்தைக் கொடுக்கவேண்டும். அவர்களை உட்கார வைத்து அதிகாரிகளுக்கு ஏற்படக்கூடிய சந்தேகங்களைக் கேட்க வேண்டும். அதில்லாமல் வியாபாரிகளை, குமாஸ்தாக்கள் போன்று அதிகாரிகள் நடத்தக்கூடாது. விற்பனை வரி செலுத்தக்கூடியவர்களும் இந்த தேச மக்கள்தான். அவர்கள் நமது யஜமானர்கள் என்ற எண்ணத்தை ஏற்படுத்தவேண்டும். அந்த அளவு எப்பகுதியிலும் நடப்பதில்லை. சிலவிடங்களில் நல்லமுறையில் நடைபெற்றாலும் பலவிடங்களிலும் அவர்களை அதிகாரிகள் குமாஸ்தாக்களைப் போன்றுதான் நடத்துகிறார்கள். விற்பனை வரி அதிகாரிகளோடு பேசுவதற்கு வியாபாரிகள் பயப்படுகிறார்கள். போலீஸ் அதிகாரி களைக் கண்டு பயப்படுவதுபோல். இந்த நிலை மாற்றப்படவேண்டும். எல்லாவிதமான விவரங்களையும், கணக்குகளையும் வியாபாரிகள் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். அவர்களிடம் நல்ல முறையில் கேட்டு வேண்டிய தகவல்களைப் பெற்றுக்கொள்ளலாம். சிறு வியா பாரிகளை எடுத்துக்கொண்டால், அவர்கள் நாலாவது அல்லது ஐந்தாவது பாரம் வரையில்தான் படித்திருப்பார்கள், அவர்கள் நல்ல முறையில் கணக்குகள் வைத்திருக்க முடியாது. ஆனால் அவர் கள் எல்லாத் தகவல்களையும் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். எப்படி வியாபாரம் செய்தோம் என்று அவர்கள் விளக்கத் தயாரா யிருக்கிறார்கள். ஆக, வியாபாரிகளை நல்ல முறையில் மரியாதை யோடு அதிகாரிகள் நடத்த முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI T. L. SASIVARNA THEVAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நம் மாநிலத்திற்கு நிறைய வருமானம் வரக் கூடிய இந்த மான்யம் மிகவும் முக்கியமானது. நமது மாநிலத்தின் வரவு செலவுக் கணக்கை நிதியமைச்சர் அவர்கள் இங்கு சமர்ப் பித்தபோது மக்கள் எதிர்பார்த்தது ஒன்றே ஒன்றுதான். வரி நிவாரணம் வேண்டுமென்பதுதான் அவர்கள் கோரிக்கை. வரி நிவாரணம் செய்யவேண்டிய ஒரு மான்யம் இருந்தால் அதில் குறிப்பிடத் தக்கது இந்த மான்யம்தான். 1959-60-ல் 12 கோடி 82 லட்சம் ரூபாய் வருமானம் இதில் வந்திருக்கிறது. 1960-61-ல் 12 கோடி 10 லட்சம் ரூபாய் எதிர்பார்க்கப்பட்டது, ஆனால் 1½ கோடி ரூபாய் அதிகமாக வந்திருக்கிறது. 1961-62-ல் 13 கோடி 93 லட்சம் ரூபாய் வருமானம் வருமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் வரக்கூடியது, கண்டிப்பாக 15 அல்லது 16 கோடி ரூபாய் நிச்சயமாக வருமென்று நான் கருதுகிறேன். விலைவாசி ஏற்றம் காரணமாக இந்த வரி ஜாஸ்தியாக வரலாம்.

THE HON. SRI R. VENKATARAMAN : விலைவாசி உயர்ந்தி ருப்பது, 10% ; கடந்த ஐந்தாண்டுகளில் வரி அதிகரித்திருப்பது 40%.

SRI T. L. SASIVARNA THEVAR : வர்த்தகத் துறையில் நம் மாநிலம் முன்னேற்றம் அடைந்திருப்பதால் இந்த உயர்வு வந்திருக்கிறதென்று கூறலாம். அதை ஒப்புக்கொள்கிறேன். இந்த வரியிலிருந்து நிவாரணம் பெறவேண்டிய பல காரியங்கள் இருக்கின்றன. குடிசைத் தொழில்கள் சம்பந்தப்பட்ட வரையில், ஏழை எளிய மக்கள் ஈடுபட்டிருக்கக்கூடிய சிறிய தொழில்களுக்குக் கூட இன்றையதினம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இவைகளுக்கு விலக்கு அளித்தால் நலமாயிருக்கும். திரு. கரையாளர் அவர்கள் சொன்னதுபோல் தீப்பெட்டி, தேங்காய், வருகடலை இவைகளுக்கும் வரி விதிக்கப்படுகிறது. வறுகடலை மீது வரி விதிப்பதினால் மிகுந்த சிரமம் ஏற்படுகிறதென்று என்னிடம் மதுரையிலுள்ள வியாபாரிகள் பலர் சொன்னார்கள். பீங்கானால் செய்யப்படுகிற வளையல்களுக்கும் வரி விதிக்கப்படுகிறது. எங்கள் மாவட்டத்தில் இளயான்குடியிடத்தில் 5,000 6,000 ரூபாய் முதல் போட்டு பர்மா, சிங்கப்பூர் போன்ற நாடுகளிலிருந்து வந்திருக்கிற அகதிகள் சிலர் கூட்டுறவு முறையில் தோல் உறித்து சில தொழில்கள் செய்கிறார்கள். அதற்குக்கூட இந்த வரி போடப்படுகிறது. இதைப்பற்றி இதே சபையில் பொது விவாதத்தின்போது கனம் அங்கத்தினர் ஒருவர் குறிப்பிட்டார்கள். அதையும் பரிசிலனை செய்து இப்படிப்பட்டவைகளுக்கு இந்த வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். பின்னர், இன்றைய தினம் உணவுப் பொருள்கள்மீது இந்த வரி விதிக்கப்படுகிறது. நம் மாநிலம் பொறுத்த மட்டில் உணவுப் பொருள்கள்மீது போடப்பட்டிருக்கும் இந்த விற்பனை வரியை எடுத்துவிடவேண்டும். மக்கள் எல்லோருமே, குறிப்பாக ஏழை மக்கள் இந்த வரி விதிப்பினால் ஏற்பட்டிருக்கும் விலைவாசி உயர்வினால் மிகவும் கடஷ்டப்படுகிறார்கள். ஆகவே, உணவுப் பொருள்கள் மீதுள்ள விற்பனை வரியைப் பரிபூடணமாக எடுத்துவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், பால். சென்ற சட்டசபைக்கு முன்னால் நம் மாநிலத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி எல்லோருக்கும் தெரியும், அழுகும் பொருள்கள் மீதுள்ள வரிக்கு விலக்கு அளிக்கவேண்டுமென்று கிளர்ச்சி நடந்தது. பால் மீதுள்ள வரியையும் எடுத்துவிடவேண்டுமென்று கிளர்ச்சி செய்தோம். எக்காரணத்தினால் பால் விடப்பட்டுவிட்டது என்பது தெரியவில்லை. அதன் மீதுள்ள வரியை எடுத்துவிடவேண்டும். நம் மாநிலத்தில் பால் பற்றாக்குறையாக இருக்கிறது. சென்னை நகரில் படி பால் 1½ ரூபாய்க்குக்கூட கிடைப்பதில்லை. எல்லோரும் உபயோகிக்கக் கூடியதாகையால் பால் மீதுள்ள வரியை எடுத்துவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், விற்பனை வரி வசூல் செய்யும் முறையில் சில குறைகள் உள்ளன. விற்பனை வரி அதிகாரிகள் திடீரென்று வந்து கடைகளில் இருந்து கணக்குகளைப் பறிமுதல் செய்து கொண்டுபோய் விடுகிறார்கள். இந்தப் புகார் பரவலாக எல்லாவிடங்களிலும் இருந்து வருகிறது. அப்படி எடுத்துக் கொண்டு போகும்போது, சிலர் செய்யத்தகாத காரியங்களைச் செய்து தப்பித்துக்கொண்டு விடுகிறார்கள், சிலர் தப்ப முடியாமல்

27th March 1961] [Sri T. L. Sasivarna Thevar]

போய் விடுகிறது. வருடந்தோறும் நல்ல முறையில் கனிசமாக, தவறுது குறிப்பிட்ட வரித்தொகையைச் செலுத்தி வருகிற வியாபாரிகளின் கடைகளிலும் புகுந்து இப்படி கணக்குப் புத்தகங்களை எடுத்துச் செல்வது என்பது தவருன காரியம். கணக்குகள் கொடுக்காது, வரியை ஏமாற்ற முயற்சிக்கும் வியாபாரிகள் பேரில் இப்படிச் செய்தால், அது தவிர்க்கமுடியாதது. ஆனல் வழக்கமாக கணக்குக் கொடுத்து சரியான வரி செலுத்தக்கூடியவர்கள் மீதும் இப்படி, அவர்கள் கடைகளில் சென்று கணக்குப் புத்தகங்களை பறிமுதல் செய்வது என்பது சரியானதல்ல. இதனல் நல்லவனுக்கும் கெடுதல் ஏற்படுகிறது, கெட்டவனுக்கும் கெடுதல் ஏற்படுகிறது. வெற்றிலே பாக்கு வைத்து வியாபாரம் செய்யும் வியாபாரிகள், விற்பனை இலாகா அதிகாரிகள் வந்து எப்பொழுது கணக்குகளைப் பிடுங்கிக்கொண்டு போவார்களோ என்ற பயம்தான் அவர்களுக்கு இருக்கிறது. ஆகவே, சர்க்கார் ஒரு உத்தரவு இட்டு, இப்படிக் கணக்குப் புத்தகங்களை எடுத்துச்செல்வதைத் தவிர்க்க வேண்டும். பின்னர், கணக்கு கொண்டுபோய் காண்பிக்கிருர்கள். 18,000 ரூபாய்க்கு கணக்கு கொடுத்தால், 20,000 ரூபாய்க்கும், 6,000 ரூபாய்க்கு கணக்கு கொடுத்தால் 10,000 ரூபாய்க்கும், 25,000 ரூபாய்க்கு கணக்கு கொடுத்தால் 30,000 ரூபாய்க்கும் வரி போடுகிருர்கள். எதற்காக இப்படி 5,000, 6,000 ரூபாய் கூடுதலாகப் போட்டு, வரி போடுகிருர்கள் என்று தெரியவில்லை. ஒருக்கால் மக்களிடமிருந்து எவ்வளவு கூடுதல் தொகை வசூலிக்க முடியுமோ அவ்வளவு தொகை வசூல் செய்யலாம் என்று நினைத்து அரசாங்கத்திலிருந்து ரகசிய உத்தரவு போடப்பட்டிருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. ஆகவே, இந்த முறையைத் தவிர்க்க வேண்டும். கணக்கு கொடுத்த பிற்பாடு அதில் தவறு இருக்கிறதென்றால் அதைக் காண்பித்து கூட்டலாமே தவிர 18,000-க்கு 20,000, 6,000-க்கு 10,000, 25,000-க்கு 30,000 என்று வைத்து வரி போடுவது சரியல்ல. கூடுதலாக வரி வசூல் செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு செய்வது நியாயமல்ல. இது பற்றி பலர் என்னிடம் கூறியிருக்கிருர்கள். நானும் ஒரு வியாபாரிதான், இது பற்றி அமைச்சர் அவர்களுக்கும் புகார்கள் வந்திருக்கலாம் ஆகவே, இது குறித்து ஆலோசித்து நியாயம் வழங்க வேண்டும். “இவேஷன்” இருக்கிறது. அதற்குக்கூட காரணம், வரி அதிகமாக யிருப்பதுதான். வரி குறைவாக இருந்தால் எல்லோரும் கொடுப்பார்கள்.

அடுத்தபடியாக, கமிஷன் வியாபாரிகளுக்கு பல துன்பங்கள் ஏற்படுகின்றன என்பதைப்பற்றி கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி லட்சுமிகாந்தம் அம்மாள் அவர்களும் எடுத்துச் சொன்னர்கள். அவர்கள் விவசாயிகள் கொண்டு வரக்கூடிய நெல்லை வாங்கி ஒரு மூட்டைக்கு 4 அணு அல்லது ஆறு அணு கமிஷன் வாங்கிக் கொண்டு விற்றுக் கொடுக்கிருர்கள். அவர்கள் நேரடியாக விற்பனை செய்வதில்லை. ஆகவே, இந்த விற்பனை வரி அவர்களுக்கு போடப்பட்டிருப்பதின் காரணமாக அவர்களுக்குப் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, இதை நீக்குவதற்கு அரசாங்கம் கவனம்

செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். முக்கியமாக தீப்பெட்டி, வறுகடலை, வளையல், மண் பாண்டங்கள் போன்றவைகளுக்கும் குறிப்பாக பாலுக்கும் போடப்பட்டிருக்கின்ற வரிகளை எடுத்துவிட்டு, உணவுப்பொருள் மீது போடப்பட்டிருக்கின்ற வரியை அறவே எடுத்துவிட வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI R. KRISHNASAMI NAIDU :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, விற்பனை வரி இலாகா மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்தத் துறையில் அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் வருமானம் அதிகரித்துக்கொண்டு வருவது எல்லோரும் அறிந்தது, அது பாராட்டத்தக்க விஷயம். சந்தோஷப்படக்கூடிய விஷயம். இந்தத் துறையில் வியாபாரிகளுக்குள்ளும் அதிகாரிகளுக்குள்ளும் ஒற்றுமை ஏற்பட்டு சரியான முறையில் அரசாங்கத்திற்கு செலுத்தவேண்டிய வரிகளை ஒளிக்காமல் செலுத்திவிடக்கூடிய நிலைமை எவ்வளவுக்கெவ்வளவு ஏற்படுகிறதோ, அதற்குத் தகுந்தபடி வருமானமும் அதிகரித்துக்கொண்டிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. இன்னும் பல இடங்களில் இந்தத் துறையில் இருக்கின்ற விற்பனை வரி அதிகாரிகளாலும், சிப்பந்திகளாலும் சில தொல்லைகள் ஏற்படுகின்றன என்று சொல்லப்படுகிறது. ஓரளவுக்கு அது வாஸ்தவமாக இருந்தாலுங்கூட, வரிவிதிப்பிலிருந்து தப்புவதற்கு செய்யப்படும் முயற்சிகளும் அதிகமாக இருந்துகொண்டிருக்கிறது என்பதையும் நாம் மறுக்க முடியாது. அந்த வகையில் வியாபாரிகளும், அதிகாரிகளும் தங்களுக்குள்ள பொறுப்பை உணர்ந்து இரண்டு பேர்களும் இணைப்பாக இருந்து நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கு கவனம் செலுத்துவது நல்லது என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

கூட்டுறவுத் துறைக்கு இந்த விற்பனை வரியின் மூலம் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. கூட்டுறவுத் துறைக்குப் பல பொறுப்புகள் இருக்கின்றன. கூட்டுறவுத் துறையில் பொது மக்களுடைய கவனத்தை ஈர்ப்பதற்காக பல பிரயத்தனங்கள் செய்யப்படுகின்றன. அங்கங்கே இருக்கக்கூடிய மக்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை பிரித்து உரித்து வேறுபடுத்துவதற்காக ரைஸ் மில், ஜின்னிங் பாக்டரி, டிக்கார்டிகேட்டர் போன்றவைகளை உபயோகிப்பதற்காக கூட்டுறவு ஸொஸைட்டிகளுக்குக் கொண்டு வருகிறார்கள். இவ்விதம் தங்களுடைய சொந்த நெல்லைக் கொண்டுவந்து அரைக்கும்போதும், அல்லது பருத்தியைக் கொண்டுவந்து பிரிக்கும்போது, வறுகடலையைக் கொண்டு வந்து கொட்டையைப் பிரித்து எடுக்கும்போது அவர்கள் விற்பனை வரி கொடுக்கவேண்டியிருக்கிறது. அவர்கள் தங்கள் சொந்தப் பொருட்களைக் கொண்டுவந்து பிரித்து எடுக்கும்போது வரி கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. விற்பனை வரி சட்டத்தின் மூலம் அதிகாரிகளால் இவ்விதம் செய்யப்படுகிறது. நிலக்கடலையை விவசாயிகள் மார்க்கட்டிங் சொஸைட்டிக்குக் கொண்டு

27th March 1961] [Sri R. Krishnasami Naidu]

வந்து, கடலை வேறு தோல் வேருகப் பிரித்து எடுக்கிருர்கள். இவ் விதம் பிரித்தெடுத்து தனியாக வைத்து, அதை நல்ல விலை வரும் போது அவர்கள் விற்கிருர்கள். ஆனல் இவ்விதம் பிரித்தெடுக்க மார்க்கட்டிங் சொஸைட்டிக்குக் கொண்டுவரும்போது வரி கொடுக்கவேண்டும் என்று அவர்களுக்குக் கட்டளையிடப்படுகிறது. அதேபோன்றுதான் பருத்திக்கும் விதிக்கப்படுகிறது. விவசாயி கள் நல்ல முறையில் தங்கள் பொருளை விற்பதற்கு நாம் பல முயற்சிகளைச் செய்து கொண்டிருக்கிருேம். அதே நேரத்தில் இவ் விதம் தொழிற்சாலைக்குள் கொண்டுவந்து பிரித்தெடுத்தால் அதற்கு வரி என்று சொல்வது, "நீ கூட்டுறவு தொழிற்சாலைக்குள் நுழையாதே" என்று சொல்லி நாம் விவசாயிகளைத் தடுப்பதாகவே இருக்கிறது. இந்த வகையில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. சர்க்காரே விதைப் பெருக்குத் திட்டத்தின் கீழ் பல உதவிகளைச் செய்து கொண்டிருக்கிறது. ஸ்ரீவில்லிப்புத்தூர் மார்க்கட்டிங் சொஸைட்டிக்கு 6,000 ஏக்கரில் நீண்ட இழை பருத்தி தயார் செய்வதற்காக திட்டம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் கிட்டத் தட்ட 1,000, 1,500 விவசாயிகள் இவ்விதம் நீண்ட இழை பருத்தி தயார் செய்து கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய பருத்தியை ஜின்னிங் பாக்டரிக்கு கொண்டுவந்து அறவை செய்கிருர்கள். இதில் பலரும் நாம் நியமிக்கின்ற வியாபாரிகள் மூலம் அறவை செய்கிருர்கள். அறவை செய்யும்போது பஞ்சு தனியாக வந்து சேருகிறது. கொட்டையைத் தனியாக எடுத்துவிடுகிருர்கள். இதற்கு தனியாக ஒவ்வொரு வரி செலுத்தவேண்டும், அதற்காக லைசென்ஸ் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று அதிகாரிகள் கூறு கிருர்கள். இவ்விதமான நிபந்தனையின் காரணமாக இந்த வருஷத் தில் சுமார் 1,000 விவசாயிகளில் ஒருவர்கூட மார்க்கட்டிங் சொஸைட்டிக்கு, ஜின்னிங் பாக்டரியை உபயோகப்படுத்த, பாக்டரியின் பக்கத்திலேயே தலைகாட்ட மாட்டார்கள் என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆகவே இதை நன்ருகக் கவனித்து இதில் ஏதாவது நல்லதொரு முடிவை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அது மட்டுமல்ல, கூட்டுறவுத் துறைக்கே இதனல் பாதகம் ஏற்படுமோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. விவசாயிகள் தங்கள் பருத்தியை அறைத்து பஞ்சு பேல்கள் ஆக்கி அதைச் சுருக்கமான இடத்தில் கொண்டுபோய் வைத்து பின்னல் விற்க முடிகிறது. அதே போன்றுதான் கடலையை கொண்டுவந்து பிரித்து கொட் டையை முத்தாக மாற்றி, கொட்டையாகவும், தோலாகவும் தனித் தனியே மாற்றி சேகரித்து வைத்துப் பின்னல் விற்பனை செய்கிருர் கள். இவ்விதம் மாற்றுவதில் எவ்விதம் வியாபாரம் செய்வது ஆகும் என்று தெரியவில்லை.

முக்கியமாக பல அன்பர்கள் பேசினர்கள், விற்பனை வரி அதிகாரிகள், ஏ.ஸி.டி.ஓ., டி.ஸி.டி.ஓ. இவர்கள் எல்லாம் நல்ல முறையில் அரசாங்கத்தின் சட்டத்தை விரிவாகப் புரிந்துகொண்டி ருக்கமாட்டார்கள் என்று. அரசாங்கத்தினுடைய சட்டங்களை சரியான முறையில் புரிந்துகொள்வதற்கு அவர்கள் கஷ்டப்

படுகிறார்கள். இன்றைக்கு நாட்டில் அனேகம் பேர்கள் சட்டக் கல்லூரியில் பயின்றுவிட்டு சும்மா இருந்துகொண்டிருக்கிறார்கள். டி.ஸி.டி.ஓ., எ.ஸி.டி.ஓ. இவர்கள் சட்டக் கல்லூரியில் பயின்றவர்களாக இருக்கவேண்டும் என்று அரசாங்கம் ஏற்படுத்தினால் நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன். அந்த வகையில் ஏற்பாடு செய்தால் பாராட்டத்தக்கதாய் இருப்பது மட்டுமல்ல, அதை எல்லோரும் வரவேற்பார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே அமைச்சர் அவர்கள் இதில் கவனம் செலுத்தி கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு எந்தவிதமான கெடுதலும் வராத நிலைமையில் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். கூட்டுறவு சம்பந்தமாக அமைச்சர் அவர்கள் தந்திருக்கின்ற அறிக்கையில் சுமார் 60 ஜின்னிங் பாக்டரிகள், டிக்கார்டிகேட்டர் போன்ற தொழிற்சாலைகள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன என்று தெரிவித்திருக்கிறது. இந்த தொழிற்சாலைகளுக்கு எல்லாம் நேரடியாக பல ஏற்பாடுகளைச் செய்து கொடுத்து ஊக்குவிக்கவேண்டுமானால், நான் குறிப்பிட்ட பல பிரச்னைகளைப்பற்றியெல்லாம் முக்கியமாகக் கவனித்து விற்பனை வரி மூலமாக ஏற்படக்கூடிய கஷ்டங்களைத் தவிர்ப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

(Sri K. Sattanatha Karayalar in the Chair.)

கைத்தறித் துணிக்கு விற்பனை வரி இல்லாத நேரத்தில், அந்தத் துணியின் மூலம் பான்டேஜ் துணிகள் தயாரிக்கப்படும்போது வரி விதிக்கப்படுகிறது. ஒவ்வொரு ஆஸ்பத்திரிக்கு எந்த அளவில் பான்டேஜ் துணி இருக்கவேண்டும் என்று அறிந்து அதற்கேற்ப தயாரிக்கப்படுகிறது. கைத்தறித் துணியை வெட்டி அவர்கள் கேட்கின்ற அளவுக்குத் தயாரித்துக் கொடுக்கும்போது வரி கொடுக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. முழு பீஸ்ஸாக இருக்கும்போது ஒரு பொருள் என்றும் அதை வெட்டி பான்டேஜ் தயார் செய்யும்போது வேறு பொருளாகவும் ஆகிவிடுகிறது, ஆகவே வரி விதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இது சரியல்ல என்று அமைச்சர் அவர்களிடம் எடுத்துக்கூறப்பட்டிருக்கிறது. தூதுகோஷ்டியினர் அமைச்சர் அவர்களை ஒருசில முறைகள் வந்து சொல்லியிருக்கின்றனர் என்று கருதுகிறேன். ஆகவே இவ் விஷயத்தில் கவனம் செலுத்தி பான்டேஜ் துணி தயார் செய்யும் போது வரி விலக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேற்சொன்ன ஒரு சில விஷயங்களைக் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, முக்கியமாக கூட்டுறவுத் துறைக்கு விற்பனை வரி மூலமாக எந்தவிதமான பாதகமும் ஏற்படக்கூடாது, பாதகமான வரி விதிப்பு முறைகள் இருக்கக்கூடாது என்று தெரிவித்து, அதற்கு ஆவன செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

27th March 1961]

*SRI V. SUBBIAH: தாற்காலிக சபாநாயகர் அவர்களே, இந்த சேல்ஸ் டாக்ஸைப் பற்றி சில விஷயங்களை முக்கியமாகக் குறிப்பிட வேண்டுமானுல், எங்கள் பகுதியில் குடிசைத் தொழிலாக இருக்கக்கூடியது தீப்பெட்டித் தொழிலும், கைத்தறித் தொழிலும் தான். இந்த இரண்டும்தான் இன்றைய தினம் பல ஆயிரக் கணக்கான வாழ்வற்ற ஏழைகளுக்கு கஞ்சி கொடுக்கக்கூடிய அளவில் கிராமப் பகுதிகளில் இருக்கக்கூடிய தொழில்கள். அந்தத் தொழில்கள் விற்பனை வரியினுல் எப்படிப் பாதிக்கப்படுகின்றன என்று பார்க்கும்போது அந்தத் தொழிலேயே எங்கே மூடி விடுவார்களோ என்று பயமாக இருக்கிறது. தீப்பெட்டிகளைப் பொறுத்த மட்டில் எடுத்துக்கொண்டால் இன்றைய தினம் அவைகள் நம் ராஜ்யத்தை விட்டு வெளி ராஜ்யங்களில்தான்—அதுவும் ஆந்திராவில்தான்—ஜாஸ்தியாக விற்கின்றன. உற்பத்தி ஆவது நம் ராஜ்யத்தில், ஆனுல் விற்பனை ஆவது வெளி மாகாணங்களில் என்று பார்க்கும்போது அது வேடிக்கையாக இருக்கிறது. நமது பகுதியில் எந்த தீப்பெட்டி விற்பனை ஆகிறது என்று கேட்டால் வட நாட்டில் செய்யப்படுகிற, விம்கோ போன்ற யந்திரங்களால் செய்யப்படுகிற தீப்பெட்டிதான். விற்பனை ஆகிறது. நமது தீப்பெட்டி வெளி ராஜ்யங்களுக்குச் செல்கிறது. சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸ் இருந்தும் 2% சேல்ஸ் டாக்ஸ் போடப்படுகிறது என்று நினைக்கும்போது, இந்தத் தொழில் அவ்வளவு தூரம் பாதிக்கப்படக்கூடிய நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. இப்போதைக்கு மாகாண சர்க்காருக்கு அந்த சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸில் 8-ன் (5) பிரிவின்படி நீக்கக்கூடிய அதிகாரம் இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் மனதில் வைக்கவேண்டும். இப்பேற்பட்ட குடிசைத் தொழில் குறிப்பாக எங்கள் பகுதியில் கோவில்பட்டி, சாத்தூர், சிவகாசி போன்ற இடத்தில்தான் இந்தத் தீப்பெட்டித் தொழில் இருக்கிறது. அங்கே ஏதாவது பாதகம் ஏற்படுமானுல், நம் ராஜ்யத்திலே, பல ஆயிர குடும்பங்கள் அவஸ்தைப்படக்கூடிய நிலைமையில் வேலையற்ற தன்மையில் நகரங்களைத் தேடிச்செல்வதைவிட வேறு கிடையாது. ஆகையால் அமைச்சர் அவர்கள் இதை ஓரளவு பார்த்து ஆவன செய்யவேண்டும். 10-30 a.m.

அதோடு ரொட்டி, பிஸ்கட், தேங்காய், பால் போன்றவைகளுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு வேண்டுமென்று வேண்டப்படுகிறது. இதைப் பற்றியும் கொஞ்சம் யோசிக்கவேண்டும்.

அடுத்தபடியாக, ப்ரிண்டிங் பிரஸ்கூட அச்சு யந்திரங்கள் வைத்து அச்சு ஆபீஸ் வைத்திருக்கக்கூடியவர்கள்கூட இந்த விற்பனை வரியினுல் பாதிக்கப்படுகிருர்கள். அவர்கள் ஒரு விஷயத்தை பிரிண்ட் பண்ணும்போது அவர்களுக்குக் கூலிதான் கிடைக்கிறது. கம்போஸிங் சார்ஜஸ், பிரிண்டிங் சார்ஜஸ் தவிர வேறு ஒன்றும் இல்லாமல் இருக்கும்போது, அதற்குக்கூட விற்பனை வரி இருக்கும் நிலைமை இருக்குமானுல், அதைப் பற்றி கொஞ்சம் யோசித்து விலக்கு அளிக்கவேண்டும். இன்றைக்கு அச்சுக்கு வேண்டிய

பேப்பரை வாங்கி வைத்துக்கொண்டு ஸ்டாக் செய்து புத்தக ரூபத்தில், நோட்டு ரூபத்தில் செய்து விற்பனை செய்தால் அதற்கு விற்பனை வரி போடுவதில் ஆட்சேபணை இல்லை. ஒருவர் பேப்பர் வாங்கிக்கொடுத்து, விஷயத்தைக் கொடுத்து, பிரஸ்ஸில் கம்போஸ் செய்து, ப்ரிண்ட் செய்து கொடுக்கும்போது அதற்கு விற்பனை வரி போடுவது என்று சொன்னால் சில இடங்களில் இந்தத் தொழில் பாதிக்கப்படும் நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. எந்த மாதிரி தீப்பெட்டித் தொழில்கள் வளர, குடிசைத் தொழில்கள் வளர நாம் விதி விலக்கு வேண்டுமென்று நினைக்கிறோமோ, அதே போன்று அச்சுத் தொழிலும் புராதனத் தொழில். தமிழ் நாட்டிலே பல ஆயிரக் கணக்கான மக்கள் ஈடுபட்டுள்ளார்கள். அவர்களுக்கு ஊக்கம் அளிக்கும் வகையில் அதற்கும் விதி விலக்கு அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வறுகடலை வியாபாரத்தை எடுத்துக்கொண்டால் இன்றைய தினம் 1 ரூபாய் அல்லது 2 ரூபாய் மூலதனம் போட்டு வறுத்து தெருவில் விற்கும்போது அதற்குக்கூட விற்பனை வரி போடப் படுகிறது. . . . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : 1 ரூபாய் அல்லது 2 ரூபாய் வைத்து விற்பனை செய்கிறவர்களுக்கு ஒன்றும் வரி கிடையாது. வருஷத்திற்கு 10,000 ரூபாய் வரையில் வியாபாரம் இருந்தால்தான் வரி உண்டு.

* SRI V. SUBBIAH : அமைச்சர் அவர்கள் கூறியபடி 10,000 ரூபாயக்கு ஒருவரும் இந்தத் தொழில் செய்வது கிடையாது. சென்னை போன்ற நகரங்களில் அம்மாதிரி இருக்குமோ என்னவோ எனக்குத் தெரியாது. சிறிய அளவில் கொத்தவால்சாவடி போன்ற இடங்களில் விற்பனை செய்யக்கூடிய அளவில்தான் இருக் கிறது. பெரிய அளவில் செய்வதாக நான் கேள்விப்படவில்லை. லட்சக்கணக்கான ரூபாய் சர்க்காருக்கு வரும்போது அவ்வளவு லட்சங்களில் இது ஒரு சின்ன விஷயம். இவைகளில் தாராள மனப்பான்மை காட்டினால்தான் அரசாங்கத்திற்கு நல்ல பெயர் இருக்க முடியும். குடிசைத் தொழிலில் வரக்கூடிய ஒன்றிரண்டு சத விதம் விற்பனை வரியைத் தாராளமாக எடுத்துவிட்டால் அமைச்சரவைக்கு நல்ல பெயர் இருக்க முடியும். இன்னும் விற்பனை வரியினால்தான் நாட்டிலே நாணயம் இல்லாமல் போய்விட்டது. பல நல்ல நாணயஸ்தர்கள் தப்பு செய்து வியாபாரம் செய்வதைவிட, அதை விட்டு விடலாம் என்று விட்டு விட்டு விவசாயம் போன்ற வேறு தொழிலுக்குப் போய்விட்டார்கள். இன்றைய தினம் வியாபாரம் செய்வதில் இரண்டு வித கணக்குகள் வைத்துக்கொள்ளவேண்டிய நிலைமை இருக்கிறது. விற்பனை வரியில் இருந்து தப்பித்துக்கொள்ள சில முறைகளைக் கையாளும்போது அவர்களோடு மனச்சாட்சி ஒத்துழைக்க முடியாத நிலையில் பெரும்பாலானவர்கள் வியாபாரத்தில் இருக்கிறவர்கள் வேறு துறைக்குச் சென்று விட்டார்கள் என்றால் இந்தத் தொழிலில் இருக்கக்கூடிய கஷ்டம்,

27th March 1961] [Sri V. Subbiah]

அதிகாரிகளுடைய பிடிப்பிலிருந்து தப்பித்துக்கொள்ள இரண்டு வித கணக்குகளை வைத்துக்கொள்ளவேண்டுமென்ற நிலைமை இருப்பதையெல்லாம் போக்குவதற்கு இதையெல்லாம் கொஞ்சம் தளர்த்தவேண்டும். இல்லாவிட்டால் வியாபாரமே செய்ய முடியாமல் போய்விடும். அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்து வியாபாரிகளுக்கு ஊக்கம் அளிக்கவேண்டுமானால் சில்லரை வியாபாரத்தில் வரும் வருமானத்தைப் பெரிதாகக் கருதாமல், எத்தனையோ துறைகளில் வருவாய் இருக்கிறது, அவைகளை நல்ல முறையில் செய்யலாம் என்று சொல்லிக்கொண்டு, இந்த சில குடிசைத் தொழில்களுக்கு அவசியம் விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. SANKARAN : கனம் தாற்காலிக சபாநாயகர் அவர்களே, சேல்ஸ் டாக்ஸ் சம்பந்தமாக எடுத்துக்கொண்டால் பல தடவைகள் இந்த சபையிலே கொண்டுவரப்பட்டு பலவித அபிப்பிராயங்கள், பலவித யோசனைகள் சொல்லப்பட்டு இந்த சட்டத்திலே பல சீர்திருத்தங்கள், முன்னேற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அதோடு கனம் மந்திரியை எடுத்துக்கொண்டால் இந்த விஷயம் சம்பந்தமாக அவருடைய அறிவு, ஆற்றல், திறன் இவைகளைப் பற்றி ஒன்றும் குறை சொல்ல முடியாது. பல விதத்தில் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கிறது. இருந்தபோதிலும் இதில் இன்னமும் இருந்துவரும் ஒன்றிரண்டு குறைபாடுகளை எடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது.

இன்னொரு மான்யத்தில் நான் சொன்னது போல, இந்த மான்யத்திற்கு நேரடியாக சம்பந்தமில்லாவிட்டாலும், சேல்ஸ் டாக்ஸ் ஆபீஸ் சம்பந்தப்பட்ட மட்டில் எடுத்துக்கொண்டால் அவைகளுக்குத் தனியாக கட்டிடங்களை அமைக்கவேண்டும். பல க்ளையண்ட்ஸ் வரக்கூடிய நேரத்தில், பல அஸெஸிஸ் வரக்கூடிய நேரத்தில் அவர்களுக்கு நல்ல முறையில் வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும். இன்றைக்குள்ள நிலைமையை எடுத்துக் கொண்டால் பல்வேறு வாடகைக் கட்டிடங்களில், கமர்ஷியல் டாக்ஸ் ஆபீஸானது முதல் சர்க்கிள், இரண்டாவது சர்க்கிள், மூன்றாவது சர்க்கிள் என்று பார்க்கும்போது நகரங்களில் பல்வேறு இடங்களில் அமைக்கப்படுகின்றன. இவைகளில் அநேக கட்டிடங்கள் வாடகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட கட்டிடங்களாக இருக்கிற காரணத்தினால் சில சமயங்களில் திடீரென்று காலி செய்யப்படுகிறது. எங்கே மாற்றப்பட்டன என்று தெரிவது கிடையாது. அவைகள் எந்தவித வசதிகளும் இல்லாமல் இருக்கின்றன. சர்க்கார் இப்போது அலுவலகங்களுக்கு சொந்தக் கட்டிடங்களைக் கட்டவேண்டும் என்று கூறியிருக்கும்போது முதலில் இது போன்ற கணிசமான வருமானம் கொடுக்கும் இந்தத் துறை சம்பந்தப்பட்ட ஆபீஸ்களுக்கு முக்கிய இடம் கொடுத்து கட்டிடங்களைக் கட்டவேண்டும். மற்ற டிபார்ட்மெண்டுகளுக்குக்கூட பிற்பாடு வைத்துக்கொள்ளலாம். வருவாய் தரக்

[Sri V. Sankaran] [27th March 1961

கூடிய இந்த ஆபீஸ்களுக்கு அதிக வசதி செய்துகொடுத்தால் அந்த அளவுக்கு வருமானத்தில்கூட அபிவிருத்தி இருக்கும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இப்போது இருக்கும் நிலைமையில் அக்கவுண்ட்ஸ் வைப்பது சற்று கஷ்டமாக இருக்கிறது. சிங்கிள் பாயிண்ட் டாக்ஸ், மல்ட்டி பாயிண்ட் டாக்ஸ் என்று இருக்கும் போது, அவைகளிலும் பல்வேறு ரேட்ஸ் இருக்கும்போது வியா பாரிகளுக்கு இன்னும் கஷ்டமாக இருக்கிறது. இதை இன்னும் கொஞ்சம் சிம்ப்ளிஃபை செய்ய முடியுமா என்று பார்க்கவேண்டும்.

முன்னால் ஒரு நண்பர் கூறியபடி மாதா மாதம் ரிட்டர்ன் கொடுக்கவேண்டும் என்பதற்குப்பதிலாக அன்யுவல் ரிட்டர்னில் இந்த விவரங்களை எல்லாம் காட்டினால் போதுமா என்பதை சர்க்கார் பரிசீலிக்க வேண்டும். தகுந்த ஆடிட்டர் ஆராய்ந்து அவர்கள் ரிப்போர்ட் கொடுத்தால் கூடுமான வரையில் அதை ஒத்துக்கொண்டு, சந்தேகம் இருக்கும்படியான கேஸ்களுக்கு மாத்திரம் அக்கவுண்ட்களைக் கொண்டுவரவேண்டும் என்று ஏற்பாடு செய்வது வியாபாரிகளுக்கு அனுகூலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக செக்ஷன் 3 (3)-ல் காம்பொனெண்ட் பார்ட் ஸைக் கொண்டு சாமான்கள் செய்யும்போது "component part is one which would retain its identity even in the manufacture of other articles".

என்று டெஃபனிஷன் இருக்கிறது. நம் ராஜ்யத்தில் இம்மாதிரி சம்பந்தப்பட்ட பல தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் இந்த டெஃபனிஷினில் வராமல் இருக்கும்போது கேடு விளைவிப்பதாக இருக்கிறது. இன்றைய தினம் தோல் சாமான்களை எடுத்துக்கொண்டால் தோலிலிருந்து மணிபர்ஸ், பாக்ஸ் போன்ற சாமான்கள் செய்வது குடிசைத் தொழிலாக ஒரு சில இடங்களில் நடக்கிறது. அவை நன்றாக வெளி நாடுகளி லிருந்து வரக்கூடிய சாமான்களோடு போட்டியிடும் வண்ணம் அவ்வளவு அழகாகச் செய்யப்படுகிறது. அவைகளுக்கு வெளி ராஜ்யங்களிலிருந்து இங்கே வரும்போது இண்டர்ஸ்டேட் டாக்ஸ், என்று 1% இங்கே இருக்கும்போது அதிக ரேட் டாக்ஸ் என்று ஏற்படுவதால் பல தொழில்கள் இந்தமாதிரி பாதிக்கப்படுகின்றன. வெளிராஜ்யத்திலிருந்து மலிவாக, வந்து குவிந்து விடும். நம் ராஜ்யத்திலுள்ள இந்த தொழில்கள் போட்டி சமாளிக்கமுடியாது, எடுபட்டுவிடும்.

அதேபோல் பிளாஸ்டிக்கை எடுத்துக்கொண்டால், அதைப் பல ஷீட்டுகளாக வாங்கிக்கொண்டு, அதிலே பல பொருள்கள் செய்யும் போது அங்கே அதற்கும் தனியாக இரண்டாம் தடவை ஒருமுறை வரி அதிக பட்சம் செலுத்த வேண்டியிருக்கிறது. ஏனெனில் ஐடென்டிடி இல்லை என்று காரணம் சொல்லப்படும். ஆதலால்

27th March 1961] [Sri V. Sankaran]

இரண்டு தடவை வரி கொடுக்க வேண்டியிருக்கிறது பொதுவாக, சட்டம் ஒரேமாதிரியாக இருப்பதால், தொழில்கள் மிகவும் பாதிக்கப்படுகிறது. சிற்சில கேசுக்கு அதன் அவசியத்தை உத்தேசித்து சட்டத்திலிருந்து சலுகைகள் கொடுக்கப்பட வேண்டும்.

அதேபோல் பென்சில் பாக்டரிகளை எடுத்துக் கொண்டால் நம்முடைய ராஜ்யத்திலே ஒன்றிரண்டு பென்சில் பாக்டரிகள்தான் இருக்கின்றன. ஆனால் இதற்கு எப்படி வரி விதிக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தால் இதை ஸ்டேஷனரி என்று சொல்லி, இதற்கு 5 சதவிகிதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. பம்பாயிலிருந்து வரக் கூடிய பென்சில்களுக்கு, மத்திய அரசாங்க வரிப்படி 1 சதவிகிதம் வரி போடுவதால், அவர்கள் அங்கிருந்து பென்சில்களைக் கொண்டு வந்து இங்கு குறைந்த விலைக்கு விற்க முடிகிறது. இதிலே இருக்கக் கூடிய பென்சில் பாக்டரி அவைகளோடு போட்டி போட்டு குறைந்த விலையில் விற்க முடியாமல் இவர்களுக்கு தொழில் பாதிக்கப்படுகிறது. ஆதலால் நம்மவர்களுக்கு ஊக்கம் கொடுக்கக் கூடிய முறையிலே நாம் இதிலே சில சவுகரியங்களை அவர்களுக்குச் செய்து கொடுக்க வேண்டும். எப்படி இவைகள் பாதிக்கப்படாமல், பம்பாயிலிருந்து பென்சில்கள் வந்து இங்குள்ள பென்சில் பாக்டரிகளோடு போட்டி போடாமல் இருக்கும்படி செய்ய முடியும் என்பதையெல்லாம் யோசித்து, சட்டத்தை ஓரளவு திருத்தம் செய்யவேண்டும். இப்படி செய்யப்படாமல் சட்டம் எப்போதும் ஒரே நிலையில் இருக்க வேண்டுமென்று விரும்பினால் நம் ராஜ்யத்திலுள்ள அவர்களுடைய வியாபாரம் வளர்ச்சியடையவோ அபிவிருத்தியடையவோ முடியாமல் ஸ்தம்பித்து விடுகிறது. ஆகவே இவர்களுக்குத் தனியான சில சவுகரியங்கள் செய்து கொடுக்க வேண்டும். இதை நன்கு பரிசீலிக்க வேண்டும். இப்படிப் பரிசீலிக்கும்போது பென்சில் பாக்டரி, தோல் சாமான்கள், பிளாஸ்டிக் சாமான்கள் ஆகியவைகளுக்கெல்லாம் எப்படி ஊக்கம் கொடுப்பது என்பதைக் கவனிக்க வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதேபோன்று சோப், பிஸ்கட், ஊதுபத்தி ஆகிய பொருள்களின் மீது விதிக்கப்பட்டுள்ள வரிகளைப்பற்றி பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். ஊதுபத்தியை எடுத்துக்கொண்டால் நமக்கு அடுத்த ராஜ்யத்திலுள்ள பெங்களூரிலேயும் இந்த தொழில் பெருமளவுக்கு, நல்ல முறையிலே ஸ்தாபிக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது. அதற்குப் போட்டியாக இங்குள்ளவர்கள் நம்முடைய ராஜ்யத்திலே உள்ள விற்பனை வரிக் கஷ்டத்தினால் பெருமளவு பாதிக்கப்படுகிறார்கள். பெங்களூரிலிருந்து குறைந்த ரேட்டில் மத்திய அரசாங்க வரியுடன் இங்கு போட்டியிடமுடிகிறது. இதையும் மனதிலே வைத்துக்கொண்டு, இப்படிப்பட்ட தொழில்கள் சம்பந்தமாக வரிவிதிப்பைக் கண்டிப்பாக மறு பரிசீலனை செய்யவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். இதேபோல் ஹார்ட்வேர் பற்றிக் கவனித்தால், இரும்பு, ஸ்டீல் ஆகிய பண்டங்களிலிருந்து சில சிறுசிறு தொழில்கள் செய்கிறார்கள். இப்படிப்பட்ட சிறுசிறு தொழில்களையும் நாம் ஊக்குவிக்க வேண்டும். ஆனால் இதற்கு

சிங்கில் பாயிண்ட் டாக்ஸ் போடப்படுகிறது. இதையும் பரிசீலனை செய்து பலமுனை வரியாக மாற்றி சலுகை கொடுக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

வறுகடலை, பட்டாணி ஆகியவற்றிற்கும் 10,000 ரூபாய்க்கு மேல் விற்பனையானால் விற்பனை வரி உண்டு என்று சொல்லப் படுகிறது. அதன்படி பார்த்தால் ஒரு நாளைக்கு 30 ரூபாய்க்கு வியாபாரம் செய்தாலும் வரி கட்டும்படியான ஒரு நிர்ப்பந்தம் இருக்கிறது. ஒரு மூட்டை வறுகடலையின் விலை கிட்டத்தட்ட 90 ரூபாயாகிறது. அப்படி நாள் ஒன்று மூட்டை வறுத்து விற்கக் கூடியதிலே அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய லாபமே சுமார் 2 ரூபாய்தான். ஆனால் அவர்கள் இப்படி மூட்டை 90 ரூபாய் விலைக்கு வாங்கி விற்கும்போது, ஒரு நாளைக்கு அரை மூட்டை விற்றாலும், அவன் விற்பனை வரியிலிருந்து தப்பாமல் இருக்க முடியாது. ஆனால் அவர்கள் விற்கக்கூடியதைப் பார்த்தாலோ தட்டைக்கு 2 அணா, 4 அணா என்று மிகவும் சிறிய அளவிலேதான் விற்க வேண்டியிருக்கிறது. வாங்குபவர்களிடம் அதனால் விற்பனை வரி சேர்க்க முடிவதில்லை. ஆகவே இதையும் நன்றாகப் பரிசீலிக்க வேண்டும். ஆகவே இதற்கு மற்றொரு யோசனையும் நான் கூறு கிறேன். இந்த சாமான்கள் மொத்தமாக இறக்குமதி செய்யும் போதே அந்த இடத்திலேயே ஒரேயடியாக டாக்ஸ் என்று போட்டு விட்டாலும் நல்லது. அதைவிட்டு கைக்குக்கை மாறும்போது அந்த மாற்றத்தின்பேரில் வரி விதிப்பைத் தடுக்க வேண்டும், இப்படிப் போட்டாலும் ஓரளவிற்கு இதிலே சிரமம் குறையும். இதையும் நன்கு பரிசீலிக்க வேண்டும். காரணம், இதைச் சாப் பிடக் கூடியவர்கள் பெரும்பாலும் ஏழைகள்தான். மேலும் இதிலே அதிகமான லாபத்தை அவர்கள் எதிர்பார்க்க முடியாது. ஏற்கனவே சில பொருள்களுக்கு இதிலிருந்து விதிவிலக்களித்து இருக்கிறோம். அதேபோல இந்த வறுகடலை, பட்டாணிக்கும் விதி விலக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோல், நெல்லுக்கும், பாலுக்கும் அவசியம் விதிவிலக் களிக்க வேண்டும். இப்படிச் செய்தால் மக்களுக்கும் இதிலே ஒரு நல்ல வரவேற்பு இருக்கும். இதற்கு விதிவிலக்களிப்பதால் ஒருசில லட்சம் ரூபாய்கள் வருமானத்திலே குறையும். அப்படிக் குறைந் தாலும் பரவாயில்லை. இப்போது கூடுதலாக சில கோடி ரூபாய்கள் வந்ததாகக் கூறுகிறீர்களே, அதிலே இதை சரிக்கட்டிக் கொள்ள லாம். அப்படிச் செய்தால்தான் இதை ஜனங்கள் ஒரு நல்ல ஜெஸ்சர் என்று நன்கு புரிந்து கொள்வார்கள். ஆகவே இதற்கும் அவசியம் விதிவிலக்களிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன்.

அடுத்ததாக, இப்போதுள்ள விற்பனை வரி விதிகளையெல்லாம் தமிழிலே போட்டால் நல்லது. இதிலே பல வியாபாரிகள் பூரண மாக ஆங்கிலம் தெரியாதவர்கள்தான் இருக்கிறார்கள். ஆகவே மெட்ராஸ் ஜெனரல் சேல்ஸ் டாக்ஸ் விதிகள், சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸ் விதிகள் ஆகியவைகளைத் தமிழிலேயும் மொழிபெயர்த்துப் பிரசுரிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். சென்ட்ரல் சேல்ஸ்

டாக்ஸ் விதிகளிலும் அடிக்கடி விதிகள் மாற்றப்படுகின்றன. அவைகளை யெல்லாம் தமிழிலேயும் அவ்வப்போது மொழி பெயர்த்துப் பிரசுரிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அதைப் போன்று சேல்ஸ் டாக்ஸ் கெஜட் ஒன்றும் வெளியிட்டால் நல்லது என்று பலர் கருதுகிறார்கள். அவ்வப்போது சட்டத்தில் பல மாறுதல்கள் ஏற்படுகின்றன. அதிலே பல வியாபாரிகள் சந்தேகங் களைக் கேட்கும்போது நிவர்த்திக்கக்கூடிய முறையிலே இது சம்பந்தமாக கெஜட் வெளியிட்டால் மிகவும் உதவியாக இருக்கு மென்று வியாபாரிகளும் கருதுகிறார்கள். ஆகவே இதையும் எடுத்துக்கொண்டு, துரிதமாகச் செய்வது நல்லதென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து, இப்போது சேல்ஸ் டாக்ஸ் அட்வைசரி கமிட்டி 6, 8 மாதங்களுக்கு ஒருமுறை கூடுகிறது. இது அடிக்கடி கூட வேண்டும். அந்த முறையிலே இதையும் மாற்றியமைக்க வேண்டும். இப்படி இவர்கள் கூடி ஆலோசனை செய்தால், அவ்வப்போது சம்பந்தப் பட்ட வியாபாரிகளிடையே உள்ள குறைபாடுகளை விவாதித்து நல்ல முறையிலே செயல்பட வசதியாக இருக்கும். அதோடு இந்தக் கமிட்டி வியாபாரிகளுடைய நேரடியான பல கஷ்டங்களைப் புரிந்து கொள்வதற்கும் வசதியாக இருக்கும். அந்தமாதிரியாக நடைமுறையிலேயும் நடக்கும்.

அதேபோல் சேல்ஸ் டாக்ஸ் அப்பலெட் டிரிபியூனலை எடுத்துக் கொண்டால், அதிலே சேல்ஸ் டாக்ஸ் டிபார்ட்மெண்ட் ஆபீஸர்களை நியமிக்கக்கூடாது. இப்படி இவர்களை நியமிப்பதால், என்னதான் இருந்தாலும் இவர்களுக்கு வியாபாரிகளுக்கு எதிராக நெஞ்சம் இறுகித்தான் இருக்கிறதே தவிர, தாராள மனப்பான்மை இருப்ப தில்லை.

THE HON. SRI R. VENKATARAMAN : இவர் எதைச் சொல் கிறார் என்று புரியவில்லை. இப்போது டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜைத் தானே இதற்கு நியமித்திருக்கிறோம். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

SRI V. SANKARAN : தலைவர்தான் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ். மற்றவர்கள் இப்படி நியமிக்கப்படலாம் அல்லவா? இதுபோன்ற கருத்துக்களை வைத்துக்கொண்டு ரோட் ரோலர் போன்ற அழுத்தமான கருத்தையும், கொள்கைகளையும் வைத்துக் கொண்டு எந்தவிதமான சலுகைகளும் அவர்களால் காட்டப்படுவ தில்லை. நம்முடைய நாட்டிலே, நம்முடைய ராஜ்யத்திலே, ஒருசில தொழில்கள் இப்படிப்பட்ட நடவடிக்கைகளால் இப்படி ஸ்தம் பித்து விட்டிருக்கின்றன. ஆகவே இந்த பொதுவிதிக் கொள்கையை ரிஜிட் ஆக வைத்துக் கொள்ளாமல், சில பொருள்களின்மீது குறிப் பாக பென்சில் பாக்டரி போன்றவற்றின்மீது, எந்தவிதத்திலும் பாதிக்காத வகையில் சலுகைகள் அளிக்க வேண்டுமென்றும், அப்படிச் செய்தால் இன்னும் பல தொழில்கள் பெருகுவதற்கும் வாய்ப்பு ஏற்படுமென்றும் கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

Sri S. NAGARAJA MONIGAR: தாற்காலிக அவைத் தலைவர் அவர்களே, விற்பனை வரி, மற்றும் இதர வருவாய்கள் மூலம் 62 லட்சம் ரூபாய் வருவாய் வரக்கூடிய இந்த மான்யக் கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன். ஆதரித்து சில வார்த்தைகள் சொல்லும் முகத்தான் பெட்டிங் டாக்ஸ், என்டர் டெயின்மெண்ட் டாக்ஸ் போன்றவைகளுக்கு இன்னும்கூட எந்த அளவுக்கு வரி போட முடியுமோ, அந்த அளவுக்கு வரி போட வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

சர்க்காருக்கு வருமானத்தை சம்பாதித்துக் கொடுக்க மாத்திரம்தான், இந்த வரிப் போடப்படுகின்றதா என்பது ஒரு கேள்வி. இந்த வரி வெகுகாலமாக இருந்துவரும் ஒரு வரியாகும். ஆகவே இதனுடைய உபயோகம், இதைப் போட்ட காரணங்கள் ஆகியவற்றைப்பற்றி இப்போது அதிகமாகப் பேச வேண்டியது அவசியமில்லை. வியாபாரம் ஒரு தொழில் என்ற முறையிலே உறுதி செய்யப்படுகின்றது. ஒரு இடத்திலிருந்து ஒரு பொருளை இன்னொரு இடத்திற்கு எடுத்துச் செல்லப்படுகின்ற மார்க்கங்கள், அப்படிப் போகக்கூடிய முறையிலே வியாபாரிகள் செயல்படுகின்ற வழிவகைகளின் அமைப்பிலே இந்த வரி விதிக்கப் படுகின்றது. ஆனால் ஒரே இடத்தில் இருந்து கொண்டு, கைக்கு கை மாற்றக்கூடிய முறையிலே வியாபாரம் செய்யக்கூடியவர்களை, உங்களுக்கு இதிலே எவ்வளவு லாபம் கிடைக்கிறது என்று கேட்டால், ஏதோ கிடைக்கிறது என்றுதான் சொல்கிறார்கள். அவர்களை எந்த முறையிலும் கட்டுப்படுத்த முடியாத நிலைமையில் இருப்பதால், விலை ஏறுகிறது என்பதையும் இந்தச் சபை பல சந்தர்ப்பங்களில் கவனித்து வந்திருக்கிறது. இந்த வியாபாரிகள் ஒருவகையிலே கட்டுப்பட்டு நடக்கவேண்டும். சர்க்காருடைய ஒரு மேற்பார்வை இருக்க வேண்டியது அவசியம். ஆகவே சர்க்கார் இப்படிச் செய்கின்றபோது சில கைத்தொழில்களுடைய முன் னேற்றங்கள் வெகுவாக வரவேற்கப்படுகின்றது. வியாபாரத்திலும், தனியார் துறையைவிட கூட்டுறவு முறையிலே வியாபாரம் செய் வதினால், பொதுமக்களுக்கு எவ்வளவு சவுகரியங்கள், முன்னேற்றங் கள் எல்லாம் ஏற்படுகிறது என்று நினைத்து, இப்போது ஏராள மான கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்திக் கொண்டு வருகின்றது. முக்கியமாக கிராமக் கைத்தொழில்கள் பொறுத்தவரை சர்க்கார் அதிகக் கவனம் செலுத்தி வருகிறார்கள். அதே போல மார்கெட்டிங் சொசைடிகள், கூட்டுறவு சங்கங்களிலும் கவனம் செலுத்தப் படுகிறது. கூட்டுறவு சங்கங்கள் பொறுத்தவரை, அவைகள் அதிக லாபம் சம்பாதிப்பது இல்லை. "மினிமம் ப்ராபிட், மேக்ஸிமம் பெனிபிட்" என்ற முறையில்தான் வேலை செய்கிறார்கள். இந்த வரி விதிப்பில், தனியாருக்குப் போடும் வீதத்தையே கூட்டுறவு சங்கங்களுக்கும் விதிக்கிறார்கள். ஓரிரண்டு இடங்களிலே அம்மாதிரி இல்லாமல் இருக்கலாம். ஆனால் பல இடங்களில் தனியாருக்குப் போடும் முறையையே கூட்டுறவு சங்கங்களுக்கும் போடும் நிலை இருக்கிறது. இன்றைக்கு விற்பனை இலாகா அமைச்சரும், கூட்டுறவு இலாகா அமைச்சரும் ஒருவராக இருப்பதால், இதை அமைச்சரவர்கள் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளு கிறேன். அப்படிக் குறிப்பிடும்போது, மட்பாண்டங்களைப் பற்றிக்

27th March 1961] [Sri S. Nagaraja Monigar]

குறிப்பிடப்பட்டது. உண்மையான வார்த்தை. அம்மாதிரிப் பல முக்கியமான பொருள்கள் இருக்கின்றன. பாலைப் பொறுத்தவரை, அது தனவந்தர்களுடைய பொருள் என்று கருதுகிறார்களா, ஏழை எளியவர்கள, நோயாளிகள், குழந்தைகள் இவர்களுக்கு அத்தியா வசியமான பொருள் என்று கருதுகிறார்களா என்று தெரியவில்லை. இது விஷயத்திலே சர்க்கார் எந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள் என்று விளங்கவில்லை. சென்ற ஆண்டுத் துவக்கத்தில் பாலுக்குக் கொஞ்சம் வரியைக் குறைத்துக் கொடுத்தார்கள். அது போதாது. சென்னை, மதுரை போன்ற பெரிய நகரங்களானால், அங்கே பெரிய பண்ணைகள் அயலார் உதவியாலும் நாமும் கோடிக்கணக்கான தொகைகளைச் செலவழிக்கும் போது, அங்கே நிலைமையே வேறு. ஆகவே நகரங்களைப்பற்றி நான் சொல்லவில்லை. ஆனால் கிராமப் புறங்களிலே அதே பாலுக்கு அம்மாதிரியே இருந்தால் போதாது, அதிகச் சலுகை கொடுக்க வேண்டும் என்பது அவசியம் என்பதை உணரவேண்டும். அங்கெல்லாம் பால் கிடைக்க என்ன செய்திருக்கிறார்கள் என்பது சந்தேகம். இந்த சர்க்கார் அவர்களுக்கு 5 பர் சென்ட் வட்டிக்கு கடன் கொடுத்திருப்பதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. லாபம் இல்லாமல் செய்யும் கூட்டுறவு சொசைடி களுக்குக் கஷ்டமாக இருக்கிறது. அதே நோத்திலே குறைந்த அளவில் வியாபாரம் செய்யும் வியாபாரிகளுக்கு வரி கிடையாது என்ற நிர்ணயம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த வரியினால் பலன் அதிகமாக இருக்கிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். இது ஒரு காமதேனு என்று கனம் திரு. கோபால்ரெட்டி முன்பே சொன்னார்கள். அப்படிப்பட்ட இலாகாவில் கொஞ்சம் கொஞ்சமாக கிராம மக்களுக்கு நன்மை செய்ய முன்வரவேண்டும்.

மார்க்கெடிங் சொசைடிகள் பொறுத்தவரையில், சிறிய இடங் களிலே, உற்பத்திப் பொருள்களைக் கொண்டு பக்கத்து நகரத்து சொசைடி மூலமாக விற்பனை செய்ய மக்களுக்கு வசதியிருக்க, அவர்கள் ஒத்துழைப்பும் தேவை. ஆகவே இம்மாதிரி சொசைடி களுக்கு ஆரம்ப காலத்தில் வரி விலக்கு அளிக்க வேண்டும். அவர் களுக்கு ஆரம்ப காலத்தில் கஷ்டம் அதிகமாக இருக்கிறது. முதல் மூன்று அல்லது ஐந்து வருஷங்களுக்கு இவர்களுக்கு அம்மாதிரிச் சலுகை கொடுத்தால்தான் அவர்கள் நல்ல முறையிலே இயங்க முடியும். இது சம்பந்தமாக சர்க்கார் கவனத்திற்கும் விண்ணப்பங் கள் வந்திருக்கும். உற்பத்தியாளர்களுக்கு இந்த மார்கெடிங் சொசைடிகள் நல்ல முறையிலே உதவிகள் அளிக்க வேண்டு மானால், இந்தச் சலுகை நிச்சயமாக அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அப்படிப்பட்ட சொசைடிகளிடமிருந்து பின்னால் வேண்டுமானால் அதிகமாகக்கூட வசூலித்துக் கொள்ளலாம் என்று சொல்லிக் கொண்டு என் பேச்சை முடிக்கிறேன்.

* **Sri A. P. C. VEERABAHU**: கனம் தாற்காலிகத் தலைவர் அவர்களே, விற்பனை வரி சம்பந்தமாகக் கொண்டு வரப்பட்டுள்ள மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மானியம் மிக முக்கியமானது. ஆகவே இதன் வருமானம் குறையாமலும், அதே நோத்தில் இந்த வருமானத்தினால் வியாபாரிகளுக்குச் சங்கடம் இல்லாமலும் இந்த

விற்பனை வரி அமைப்பு இருக்க வேண்டும் என்பதை அமைச்சரவர்களும் ஒத்துக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். இவ்வளவு பெரிய வருமானம் வரக்கூடிய இனத்தை செண்ட்ரல் எக்ஸைஸாக விட்டுக் கொடுக்கும் தன்மை சில காலமாக ஏற்பட்டு வருகிறது. நிச்சயமாக வருங்கால அமைப்பிலே பெரிய வருமானம் வரும் இனமாகிய இதை கலால் இனத்தோடு இணைத்து, ராஜ்ய சர்க்கார் ஜூரிஸ்டிக்ஷனை மத்திய சர்க்காருக்கு மாற்றி அமைக்க மத்திய சர்க்கார் வற்புறுத்தினுல், நம் ராஜ்ய சர்க்கார் அதற்கு ஆதரவு கொடுக்கக்கூடாது, அந்த விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று கொள்கையளவில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நான் பொது விவாதத்தின் போதே குறிப்பிட்டேன், உணவுப் பொருள்கள் மீது உள்ள வரிக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று. இவ்வளவு பெரிய வருமானம் வரும் இனத்தில் உணவுப் பண்டங்களுக்கு இன்றைக்கு இருக்கும் 1 பர்செண்டையும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்பதையும் அமைச்சர் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். (கனம் ஸ்ரீ. ஆர். வெங்கட்ராமன்: என்ன?) உணவுப் பொருள்கள்மீது இருக்கும் ஒரு பர்சண்ட் வரியையும் ப்ரொக்ரஸிவ்வாக ½ பர்சென்டாகக் குறைத்து, பிறகு இல்லாமல் செய்ய வேண்டும் என்று சொன்னேன்.

கல் செக்கு எண்ணெய்க்கு விலக்குக் கொடுத்திருக்கிரும். ஆனல் வேறு எண்ணெயோடு சேர்த்து வியாபாரம் செய்தால், வரி விலக்குக் கிடையாது. கல் செக்கு எண்ணெயாகத் தனியாக வியாபாரம் செய்வது என்பது முடியாத காரியம். இன்றைக்குக் கொடுத்திருக்கும் விலக்கு, தெருவில், தலைச்சுமையாகக் கொண்டு வரும் ஹாக்கர்ஸ்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. அது தேவையில்லை என்று சொல்ல விரும்புகிறேன். ஏனென்ருல், அவர்கள் விற்பனை ரூ. 10,000-க்குள்ளே விழும் டர்னேவர்தான். ஆகவே இந்த ஹாக்கர்ஸ்களுக்கு இந்தச் சலுகை தேவையற்றது. தனியாக இந்த செக்கு எண்ணெயை வியாபாரம் செய்கிறது என்ருல் அவர்களுக்குக் கொடுக்கிரும் என்று சொல்லுகிரும். ஆனல் அது நடைமுறையில் அப்படிச் செய்ய முடியாது. ஆகவே, கல் செக்கு எண்ணெய்க்கு எந்த வகையில் இருந்தாலும் அதற்கு விலக்கு உண்டு என்று இருக்க வேண்டும். மற்ற எண்ணெயோடுதான் சேர்த்து வியாபாரம் செய்ய வேண்டியிருக்கிறது . . .

**THE HON. SRI R. VENKATARAMAN:** அப்படியிருந்தால் எது செக்கு எண்ணெய் என்று எப்படிக் கண்டுபிடிக்கிறது? அதற்கு வழியும் சொல்லுங்கள்.

**SRI A. P. C. VEERABAHU:** எவேஷன் ஆப் டேக்ஸுக்கு வழி மெம்பர்களிடமிருந்து எதிர்பார்க்க முடியாது. ஆனல், நான் சொல்லுவது என்னவென்ருல், அந்த கல்செக்கு எண்ணெயை எங்கிருந்து வியாபாரம் செய்தாலும், அதற்கு விலக்கு அளிக்க

வேண்டும் என்பது. அவர்களை நம்பித்தான் செய்யவேண்டும். இன்றைக்கு மற்ற விஷயங்களில், அவர்கள் கணக்கு வைத்திருக்கிறார்கள். அவைகளை நம்பித்தான், சட்டத்தை நம்பித்தான், அதிகாரிகளை நம்பித்தான் வரி வசூல் செய்யவேண்டியிருக்கிறது. அப்படிச் செய்யத் தவறியவர்கள் தண்டனைக்கு உள்ளாகிறார்கள். பொதுவாகக் காரண்டி உண்டுபண்ணிக் கொடுக்கமுடியாது. ஆகவே நாட்டு செக்கு எண்ணெய்க்குக் கொடுத்திருக்கும் விலக்கை நல்ல முறையிலே பயன் படும்படி செய்யவேண்டும். செக்கு எண்ணெய் மாத்திரம் வியாபாரம் செய்வதானால், அதன் க்வாண்டம் குறைந்துதான் இருக்கும். அப்பொழுது சலுகையே தேவையில்லை. ஆகவே, இந்த விஷயத்தை நன்கு பரிசீலித்து, இந்த வரியின் அட்மினிஸ்ட்ரேஷனில் என்ன உதவிகள் அவர்களுக்குச் செய்யலாமோ அந்த முறையில் இதை அமைக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன். அதோடுகூட வியாபாரிதான் evade பண்ணலாம். கூட்டுறவு சொசைடிகள் பண்ண மாட்டார்கள் என்ற நம்பிக்கையாவது வைத்து கூட்டுறவு சொசைடிகள் மூலமாக விற்பனை செய்யக்கூடிய எண்ணெய்க்காவது விலக்கு அளிக்கவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அரசியல் அமைப்பு (Constitution) பிரகாரம் அப்படி டிஸ்க்ரிமினேஷன் (Discrimination) பண்ணக்கூடாது. 11 a.m.

SRI A. P. C. VEERABAHU : கனம் மந்திரி சொல்கிற 'மூடை'-ப் பார்த்தால் ஒன்றும் உதவியாக இருக்குமென்று தோன்றவில்லை. இப்படிச் சொன்னால் அப்படி, அப்படிச் சொன்னால் இப்படி என்றால் நாங்கள் என்ன செய்ய முடியும்? இருக்கக்கூடிய கஷ்டத்தை நிவர்த்தி செய்யவேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன். இது டிஸ்கிரிமினேஷன் என்றால் என்ன பண்ணுவது? ஏற்கனவேயே கூட்டுறவு சொசைடிகளுக்கு சில இனங்களில் விற்பனை வரியில் இருந்து விலக்கு அளித்திருக்கிறோம். அளிக்காமல் இல்லை. அதைப்போல அமைச்சர் அவர்கள் கொஞ்சம் யோசனை செய்தால் வழி கண்டுபிடிக்கலாம். இன்னொன்று. கல் செக்கு எண்ணெய்க்கு மத்திய சர்க்கார் மானியம் கொடுக்கப்படுகிறது. ரீஜனல் வாரியாகக் கொடுக்கப்பட்ட மானியம் எவ்வளவு என்கிற கணக்கிருக்கிறது. அதைக்கொண்டு கல்செக்கு எண்ணெய் எவ்வளவு உற்பத்தியாகியிருக்கும் என்று கணக்கிட்டுவிடலாம். அந்த கணக்கைக் கொண்டாவது பின்னால் சேல்ஸ் டாக்ஸ் ரிமிஷன் கொடுத்துக் கொள்ளலாம். இதையும் அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்யவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று. பிற மாகாணங்களில் இருந்து வரக்கூடிய பொருள்களுக்கு 6 சதவிகிதம் என்று வரி போட்டு வசூல் செய்கிறார்கள். சப்ளையர்ஸ் சேல்ஸ் டாக்ஸ் என்று குறிப்பாக ஆட்டோமொபைல்ஸ் ஸ்பேர் பார்ட்சுகளுக்கு கட்டிய வரி வசூல் செய்தால் இப்படி ஏதோ சட்ட வியாக்யானப்படி கட்டவேண்டும் என்று சொன்னால் பல வியாபாரிகளைப் பாதிக்கிறது. குறிப்பாக ஒரு

வருஷத்திற்கு சிறு வியாபாரிகள்கூட இருபது, முப்பது லட்சம் டர்னோவர் காட்டியிருப்பார்கள். அவர்களை இன்றையதினம் வரி கட்டுங்கள் என்று நோட்டீஸ் கொடுப்பதானது சொத்தை விற்று, முதலை விற்று கட்டும்படியான நிலைமையை உண்டாக்கும். காட்டுதல் நஷடத்திற்கே அது கொண்டுபோய்விடும். இனிமேலாக விற்கக் கூடியவருக்கு வரி கட்டவேண்டுமென்றால் எப்படியோ கணக்கு வைத்திருந்து கட்டிவிடுவார்கள். ஆகவே பழைய வருஷங்களுக்கு இப்போது கட்டவேண்டுமென்று வற்புறுத்தக்கூடாது என்றும், செக்கெண்ணெய் சம்பந்தப்பட்டவரையில் மில்லெண்ணெயோடு வைத்துப்பார்த்தாலும் தாரதம்மியம் இராது விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்றும் நடை முறையில் எனக்குத் தெரியவந்த கஷ்டங்களை எடுத்துச்சொல்லி, கலால் மானியத்திற்கு இதைக் கொண்டுபோய்விடக்கூடாது. நாளுக்கு நாள் இந்த இனம் இருபது கோடி, நாற்பது கோடியாக அதிகரிக்கக்கூடிய வகையில் நம் கையில் இருக்கத்தக்க வழிவகைகளைக் காணவேண்டும். எதற்கு உதவி செய்யவேண்டும் என்று நினைக்கிறோமோ அதைப் பீனலைஸ் பண்ணும்படியான நிலைமை இருக்கக்கூடாது என்பதை எல்லாம் சொல்லி என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

Sri M. P. SUBRAMANIAM: சட்டமன்றத் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கோரியிருக்கிற மானியத்திற்குப் பிரேரிக்கப் பட்டிருக்கிற வெட்டுப் பிரேரணையை ஆதரித்து பொதுவான விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். தமிழ்நாட்டு அரசாங் கத்தைப் பொறுத்த வரையில விற்பனை வரி என்பது வருவாய் தருவதிலே முக்கியமான வரி என்பது நமக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இந்த வரி நாளடைவில் மத்திய அரசாங்கத்தின் சென்டிரல் எக்ஸைஸ் வரியாக மாறிவிடுமோ என்று ஐயத்தில் அப்படி விடக் கூடாது என்று ஸ்ரீ வீரபாகு அவர்கள் வற்புறுத்திக் கூறியதை நான் ஆதரிக்கிறேன். ஏற்கனவே வரி விதிப்பில் நமக்குள்ள அதிகாரம் பெரும் அளவு குறைந்துவிட்டது. மிகக் குறுகிய அளவு தான் நம்மிடத்தில் இருக்கிறது. இந்த வரி விதிக்கும் அதிகாரத் தையும் அவர்களிடத்தில் ஒப்படைத்துவிட்டால் அப்புறம் மாநில அரசாங்கம் என்பது மத்திய அரசாங்கத்தில் இருந்து பணம் பெற்று நடக்கக்கூடிய ஒரு இலாகாவைப்போல ஆகிவிடும். மத்திய அராங்கத்தில் இருந்து மானியம் பெற்று நடத்தும் அரசாங்கமாக இது மாறிவிடாது இருக்கவேண்டுமானால் இந்த விற்பனை வரி விதிப்பு உரிமையை நாம் இழக்கும் நிலைக்குச் சம்மதிக்கக்கூடாது என்று முதலாவதாக நான் வலியுறுத்திக் கூறிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக விற்பனை வரியைப் பொறுத்த வரையில் அரசாங்கம் தங்களுடைய கொள்கையைச் செயல் ஆக்குவதற்கும், சில பல வியாபாரிகளை இணைப்பதற்கும் நடவடிக்கை எடுத்திருப் பதானது நியாயமானது என்பதையும் இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன். ஆனால் பல மெம்பர்கள் சுட்டிக்காட்டியது போல உணவுதான்யங்களின் பேரில் உள்ள வரியை ரத்து செய்யவேண்டு மென்று பல ஆண்டு காலமாக வற்புறுத்தி வருகிறோம். அதுவும் இந்த நேரத்தில் உணவுப் பண்டங்களின் விலையானது நாளுக்கு நாள் ஏறிக் கொண்டிருக்கிறது.

27th March 1961] [Sri M. P. Subramaniam]

(Deputy Speaker in the Chair.)

அவற்றின்மீது விதிக்கப்பட்டுள்ள வரியை ரத்து செய்வதானது பல லட்சம் மக்களுடைய கோரிக்கைகளுக்கு இணங்குவதாக ஆகும் என்று இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

மற்றும் பலர் குறிப்பிட்டது போல குடிசைத் தொழில் பொருள்களுக்கும், கூட்டுறவுத் தொழில் பொருள்களுக்கும் நிச்சயமாக விதிவிலக்கு அளித்தாக வேண்டும். அதுவும் குடிசைத் தொழில்களில் பல லட்சக்கணக்கான பேர்கள் வேலை செய்வதனால், வேலை வாய்ப்பு பெறுவதனால் அதற்கு அதிக ஊக்கம் அளிப்பதற்காக இப்படிச் செய்ய வேண்டியது மிகமிக அவசியம். மேலும் இந்தக் குடிசைத் தொழில் பொருள்கள், கூட்டுறவுத் தொழில் பொருள்கள் எல்லாம் மற்ற மற்ற பொருள்களோடு பொது மார்க்கெட்டில் போட்டிபோடவேண்டிய நிலைமை இருப்பதனால் எல்லாவற்றுக்கும் வரி விதிக்கும்போது அவற்றோடு போட்டி போட முடியாது: ஆகவே கண்டிப்பாக இவைகளுக்கு விதிவிலக்கு அளிக்க வேண்டியது அவசியம் என்பதை இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

இறுதியாக மின்சாரம், ஆயில் என்ஜின், பம்பு செட்டு போன்ற இவைகளுக்கு வேண்டிய ஸ்டார்டர், ஸ்விச் போன்றவைகளுக்கு 7 சதவிகிதம் வரி போடுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அதே நேரத்தில் பழைய இரும்பைக் கொண்டே அந்தச் சாமான்களைப் பண்ணக்கூடிய சமயத்தில் அதற்கும் 7 சதவிகிதம் வரி என்பதானது சரியல்ல. ஆகவே இத்தகைய பொருள்களுக்கு வரி விலக்கு அளிக்கத் தக்க வழிவகைகளைக் காண வேண்டுமென்று சொல்லிக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

SRI N. MARUDACHALAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, வெட்டுப் பிரேரணையை ஆதரித்து என்னுடைய கருத்தைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதாவது விற்பனை வரி சம்பந்தப்பட்ட வரையில் சாதாரணமாக ஓட்டை உடைசல் பழைய சாமான்கள் வாங்கி விற்கின்ற சிறிய வியாபாரிகளுக்கு பரிபூரணமாக விலக்கு இருக்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். இந்தச் சிறிய வியாபாரிகள் கிராமங்களுக்கு எல்லாம் சென்று ஈசாப் பெட்டி, இரும்புத் துண்டு, ஓட்டை உடைசல் சாமான்களை வாங்கி வருகிறார்கள். அதை வாங்குகிறபோதும் பில் கிடையாது. விற்கிறபோதும் பில் கிடையாது. மாசம் பூரா வியாபாரம் செய்தாலும் ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் ஒண்ணரை ரூபாய் கிடைக்காது. அதைக் கொண்டு அவன் ஜீவிக்க வேண்டும், கடைக்கு வாடகை கட்டவேண்டும், வரியும் கட்ட வேண்டுமென்று சொன்னால் சரியல்ல. ஆகவே இந்தச் சிறு வியாபாரிகள் சம்பந்தப்பட்ட வரையில் விற்பனை வரியைப் பரிபூரணமாக ரத்து செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

[Sri N. Marudachalam] [27th March 1961

கோவையைப் பொறுத்த மட்டில் இந்த வியாபாரம் செய்யக் கூடியவர்கள் ஏழை முஸ்லீம்கள். அவர்கள்தான் இந்த வியாபாரத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். இது "ஹோல் சேல்" வியாபாரம் அல்ல. பெரிய வியாபாரிகளுக்குக் கூடுதலாகப் போட்டாலும்கூட அவர்களால் கொடுக்க முடியும். ஆக, இந்த வரியை ரத்து செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களிடம் மகஜர்கள் மூலமும், தூதுகோஷ்டி மூலமும் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, இதை உடனடியாக ரத்து செய்ய வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் எல்லோரும் எந்தெந்த துறையில் இந்த வரி பாதிக்கிறது என்பதையெல்லாம் எடுத்துச் சொன்னார்கள். அவைகளில் சில கொள்கை பூர்வமான குறைபாடுகள். சில தனித்தனி இனங்களுக்கு ஏற்படுகிற கஷ்டங்கள். கொள்கைபூர்வமாக இருக்கிற குறைபாடுகளை எடுத்துக் கொண்டால் கூட்டுறவு இயக்கத்திற்கு நாம் வரி விலக்கு கொடுக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் தெரிவிக்கப்பட்டது. அதையொட்டித்தான் வெட்டுப் பிரேரணையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. 1939-ம் வருடத்திய சட்டத்தில் கூட்டுறவு இயக்கத்திற்காக நாம் வரி விலக்குக் கொடுத்துத்தான் இருந்தோம். ஆனால் இது நிபுணர் ஆராய்ச்சிக்கு விடப்பட்டது. அவர்கள் செய்த சிபார்சு என்னவென்று நான் அதைப் படித்துக் காட்டிவிட்டால் மேற்கொண்டு அதிகமாகச் சொல்லத் தேவையிருக்காது. அதை படித்து விடுகிறேன். டாக்டர் லோகநாதன் அறிக்கையில், 20-வது பக்கத்தில்

(Dr. Loganathan's report—page 20.)

'Regarding the concessions of a discriminatory kind such as the exemption in favour of Co-operatives the object of the Government would appear to be to encourage certain types of production in preference to others (e.g., hand industry as against machine industry) or certain kinds of institutions in society (e.g., co-operatives). The justification of economic concessions to promote social objectives of the Government is not in question. But as the Taxation Enquiry Commission has pointed out : "Sales Tax concessions are hardly suitable method of encouraging particular industries, trades, activities, etc. Even where such encouragement through tax concession is deemed to be both essential and in conformity with national economic polities, care should be taken to ensure that the exemption does not lead to evasion or abuse". I recommend that in general in the interest of smooth administration of Sales Tax, it would be desirable to find other means of encouragement, such as subsidies and subventions, than an exemption from Sales Tax'

என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சிபார்சுப்படி இந்தக் கூட்டுறவு இயக்கத்திற்குக் கொடுத்திருந்த விலக்கை

27th March 1961] [Sri R. Venkataraman]

எடுத்து விட்டோம். டாக்டர் லோகநாதன் அவர்கள் சிபார்சுகளில் ஒரே இனத்தைத் தவிர மற்றவைகளை சென்ட் பர்சென்ட் ஒத்துக் கொண்டோம். அவர்கள் பொது விற்பனை வரியை, மல்டி பாயின்ட் டாக்ஸ் 2 சதவிகிதம் இருப்பதை 1 சதவிகிதமாகச் செய்யவேண்டுமென்று சொன்னார்கள். அதை நாங்கள் ஒத்துக் கொள்ள இயலவில்லை. நாட்டின் நிர்வாகத்திற்கு எவ்வளவு பணம் தேவை என்பதை நிபுணர் சொல்ல முடியாது. நிர்வகிப்பவர்கள்தான் சொல்ல முடியும். ஆகவே அந்த ஒரு சிபார்சைத் தவிர மற்ற எல்லா சிபார்சுகளையும் அப்படியே ஒப்புக் கொண்டோம். அதனால் பல விளைவுகள் இந்த ராஜ்யத்தில் ஏற்பட்டது என்பதும் எனக்குத் தெரியும். அதற்குப் பொறுப்பு, சர்க்கார் நிபுணர் செய்த சிபார்சுகளை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று சட்டசபை சொன்ன காரணத்திற்காக அதை எல்லோரும் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். உணவுப் பொருள்கள் மீது வரி விதிக்கக் கூடாது என்று சொன்னார்கள். உணவுப் பொருள்களின் விலை விற்பனை வரியினால் எந்தளவிற்கும் பாதிக்கப்படவில்லை. விலைவாசியேற்றம் பல மடங்கு இருக்கிறது. வரி ஒரு சதவிகிதம் தான் இருக்கிறது. ஆகவே, விலைவாசி உயர்வு விற்பனை வரியினால் ஏற்படவில்லை என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். பிற ராஜ்யங்களிலும் உணவுப் பொருள்கள்மீது வரி விதிக்கிறார்கள் என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன். உதாரணமாக, கேரளாவில் விதித்திருக்கிறார்கள், ஆந்திராவில் 4 சதவிகிதம் "பாடி" மீது விதிக்கிறார்கள். நாம் விதிப்பது 1 சதவிகிதம்தான். உணவுப் பொருள்மீது வரியைக் குறைத்தால் வசூல் அதிகமாக வந்துவிடுமென்று கனம் அங்கத்தினர்கள் இப்பொழுது சொல்லவில்லை. 1956-57-லேயே சொன்னார்கள். அதற்கொப்ப 2 சதவிகித வரியை 1 சதவிகிதமாகக் குறைத்தோம். வருமானம் பாதி குறைந்து விட்டது. ஆகவே, அப்படிக் குறைப்பதினால் வருமானம் அதிகமாகக் கிடைக்கும் என்பது கூட உண்மை என்று நிரூபிக்கப்படவில்லை. ஆகவே, உணவுப் பொருள் மீது வரி விலக்கு அளிப்பது என்பது இப்பொழுது நம் ராஜ்யத்திற்கு இருக்கிற பொருள் தேவை குறித்தும், நம் ராஜ்யத்தில் ஏற்படுகிற முன்னேற்றமான செலவுகள் குறித்தும், நிதி தேவை என்ற அடிப்படையிலும் அதை நாம் ஏற்றுக் கொள்ள இயலாதிருக்கிறது. அடுத்தபடியாக, ஒரு முனை வரி விதித்தால் நமது எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து விடுமென்று அபிப்பிராயம் இருந்தது. அதை ஒரு சர்வரோக நிவாரணி என்பதாக இந்தச் சபையில் எல்லோரும் எடுத்துப் பேசினார்கள். என் அபிப்பிராயம் ஆரம்ப காலத்திலிருந்தே விற்பனை வரி என்பது பலமுனை வரியாகத் தான் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் பலவிதக் கணக்குகள் வைக்கத் தேவையில்லை. மொத்த விற்பனை எவ்வளவு இருக்கிறது என்று பார்த்து அதற்கு விற்பனை வரி விதித்துவிட முடியும். தொல்லைகள், தொந்தரவுகள் இருக்காது. அதற்கு ஏதாவது நிவாரணம் கொடுக்க வேண்டுமென்று சொன்னால் நாம் இந்தக் கம்பவுண்டிங்கை நீடித்துக் கொண்டே போகவேண்டும். அதன்மூலம் குறைந்த வியாபாரம் உள்ளவர்களுக்கு நிவாரணம்

[Sri R. Venkataraman] [27th March 1961]

அளிக்கவேண்டுமென்பது என் சொந்த அபிப்பிராயம். அதை இந்தச் சபையில் திருப்பித் திருப்பிச் சொன்னேன். ஆனால் கனம் அங்கத்தினர்கள் "இந்த மாதிரி பல முனை வரி வேண்டுமென்று நினைக்கிறார், ஒருமுனை வரியில் உள்ள நன்மையை மக்கள் அடையாமல் இருக்க வேண்டுமென்பதற்காகப் பேசுகிறார்" என்றெல்லாம் சொன்னார்கள். நிபுணர் சிபார்சை அப்படியே ஒத்துக்கொண்டு 75 பண்டங்களை ஒருமுனை வரிக்குக் கொண்டு வந்தோம். அப்படி ஒரு முனை வரிக்குக் கொண்டுவந்ததன் விளைவாக, சிறு சிறு வியாபாரம் செய்கிறவர்கள், சிறு சிறு உற்பத்தியாளர்கள் எல்லோரும் இந்த வரி விதிப்பில் வந்து விட்டார்கள். ஒருமுனை வரி விதிப்பில் இன்று 10,000 ரூபாய் வரையில் எக்செம்ஷன் கிடையாது. கூடையில் சரக்கைக் கொண்டுபோய் சந்தையில் விற்றால் கூட உடனே அதற்கு வரி கட்டுவது, ரெஜிஸ்ட்ரேஷன் செய்ய வேண்டுமென்ற நிலை ஏற்பட்டு விட்டது. இதை அவ்வப் போது பரிசிலனை செய்து அந்தந்தச் சமயத்தில் விலக்குக் கொடுத்து வந்திருக்கிறோம். ஒருமுனை வரியிலிருந்து விலக்களித்து பலமுனை வரிக்கு மாற்றியமைத்துக் கொண்டு வந்திருக்கிறோம். எந்தெந்த இடங்களிலெல்லாம் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று எங்களுக்குத் தெரிந்ததோ அந்த இடங்களில் எல்லாம் ஒரு முனை வரியிலிருந்து நாம் விலக்கு அளித்து அதைப் பலமுனை வரிக்கு மாற்றியமைத்துக் கொண்டு வந்திருக்கிறோம். அப்படி இந்த ஆண்டும் பரிசீலனை செய்ததில் பல பண்டங்களுக்கு ஒருமுனை வரி விதிப்பு மூலம் கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பது ராஜ்ய சர்க்காருக்கு நன்றாகத் தெரிந்தது. அதைப்பற்றி சட்டசபையிலும் கனம் அங்கத்தினர்கள் பல முறை எடுத்துப் பேசினார்கள். பொது விவாதத்தின் போதும் சொன்னார்கள். அது தவிர மகஜர்களும் வந்திருக்கின்றன. அதைப் பரிசீலனை செய்ததில் கீழ்கண்ட முடிவுகளை இந்த ராஜ்ய சர்க்கார் எடுத்திருக்கிறார்கள். உதாரணமாக, பக்கெட்டுகள் போன்ற சிறு இரும்புச் சாமான்களை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்கிறவர்கள் 4,000, 5,000 ரூபாய் என்று உற்பத்தி செய்தாலும் இந்த ஒரு முனை வரியினாலே அவர்களுக்கும் வரி வந்துவிடும். ரெஜிஸ்ட்ரேஷனும் செய்ய வேண்டியிருக்கிறது. வால்டாக்ஸ் ரோடில் இருப்பவர்கள், ரெஜிஸ்டர் செய்யவில்லை, வரி கட்டவில்லை. ஆனால் ஒரு முனை வரி போட்டால் அவர்கள் ரெஜிஸ்டர் செய்யவேண்டிய நிலை, வரி கொடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டு விடுகிறது. பக்கெட்ஸ் போன்ற சில்லறை சாமான்கள் செய்பவர்கள் எல்லோருக்கும் இந்த வரி வந்து விட்டது. ஆகவே சர்க்கார் இதைப் பரிலசினை செய்து Item 23 Machinery (other than those falling under item 41) including any article, implement, contrivance, apparatus or part of such machinary made of any metal (not being a typewriter, tabulating machine, calculating machine and duplicating machine and parts thereof), hardware, iron and steel (other than those mentioned under declared goods) and all articles made therefrom (excluding articles used for agricultural purposes and all items specifically provided in the schedule). 3 சதவிகிதம் சிங்கிள்

27th March 1961] [Sri R. Venkataraman]

பாயின்ட் என்று இருப்பதை எடுத்து விட்டு மல்டி பாயின்ட்டுக்குக் கொண்டு வர முடிவு செய்திருக்கிறது. அப்படிச் செய்வதால் ரூ. 10,000-க்குக் குறைவாக வியாபாரம் செய்கிறவர்களுக்கு வரி விலக்கும் ரூ. 50,000 வரை செய்தால் கூட கம்பவுண்டிங் முறையும் கிடைக்கும். கம்பவுண்டிங் முறையால் வரி 1 சதவிகிதம் குறைவாகவே கொடுக்க வேண்டியிருக்கும். ரூ. 50,000 சலுகையாவது கிடைக்கவேண்டுமென்ற நோக்கத்துடன், அவர்களை இந்த ஐட்டம் 23-ல் இருந்து நீக்கிவிட முடிவு செய்துவிட்டோம். இதற்கான நோட்டிபிகேஷன்ஸ் பிரசுரிக்கப்படும்.

இதுபோன்ற சில பண்டங்களைப்பற்றி இந்தச் சட்டசபையில் அடிக்கடி பலர் பேசினார்கள். முக்கியமாக இளையாங்கடியில் இருக்கின்ற சொஸைட்டிகளில் இதன் காரணமாக ஏராளமான நஷ்டம் ஏற்பட்டிருக்கின்றது என்று தெரிவிக்கப்பட்டது. முன்னால் ஐந்து சதமானம் ஸிங்கிள் பாயின்ட் டாக்ஸ் என்று போட்டிருக்கும் போது சாதாரணமாகத் தெருவில் தோல் மூலம் மணிபர்ஸ், பெலட் இவைகள் எல்லாம் செய்து விற்றால்கூட வரி கொடுக்க வேண்டும் என்ற நிலைமை இருந்தது. இதற்கு இப்போது மல்டிபாயின்ட் வரி கொடுக்கப்பட்டிருக்கிறது. இல்லையென்றால் தெருவில் உட்கார்ந்து இம்மாதிரிப்பட்ட வேலை செய்பவர்கள் எல்லாம் ரெஜிஸ்ட்ரேஷன் செய்து கொள்ள வேண்டிய நிலைமை ஏற்படும்.

Item 39—Leather of all kinds excluding foot-wear க்கு இப்போது ஐந்து சதவிகிதம் என்றிருப்பதை விலக்கு அளித்திருக்கிறோம். இதன் காரணமாக இதன் மீதுள்ள வரி இனிமேல் மல்டி பாயின்ட்டாகப் போய்விடும். பத்தாயிரம் ரூபாய்க்கு உட்பட்டு வியாபாரம் செய்கின்றவர்களுக்கு எந்தவிதமான வரியும் செலுத்த வேண்டியிருக்காது.

அடுத்ததாக, திரு. மருதாசலம், ஸ்ரீமதி அனந்தநாயகி போன்றவர்கள் பாட்டில்களை வாங்கி விற்பனை செய்கின்றவர்களுக்கு இப்போது ஒருமுனை வரி போட்டிருப்பதைப்பற்றி சொன்னார்கள். இப்போது 6 சதமானம் என்று போடப்பட்டிருக்கிறது. இவர்கள் பாட்டில்களை வெளியிலிருந்து வாங்கி செகண்ட்-ஹான்டாகப் போய் விற்கிறார்கள். இதில் செக்கன்ட்-ஹான்ட் என்று நிரூபிப்பதற்குப் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. முன்னால் கூட இதைச் சரியாக நிரூபித்தால் வரிவிலக்கு கிடைக்கும். ஆனால் பல வியாபாரிகளால் இதை நிரூபிக்க முடியவில்லை. ஆகவே, இப்போது ஆறு சதவிகிதம் ஒரு முனை வரி என்றிருப்பதை நீக்கிவிடுகிறோம். ஆகவே

*Item* 54.—Glasswares, bottles, phials, funnels, globes, glass parts of lamps, sheets and plates, etc.

ஆகியவைகளுக்கு மல்டி பாயின்ட் முறை வந்துவிடும். இதன் மூலம் பத்து ஆயிரம் ரூபாய்க்கு உட்பட்டு வியாபாரம் செய்கின்றவர்களுக்கு எந்தவிதமான வரியும் இருக்காது. பத்து ஆயிரம் ரூபாய்க்கு மேல் இந்த வியாபாரத்தை யாரும் செய்து கொண்டிருக்க மாட்டார்கள். இதன் கீழ் வளையல்களும் மண்பாண்டங்களும் வந்துவிடும். ஆகவே இந்தப் பொருள்களுக்கு எல்லாம் 10 ஆயிரம் ரூபாய்க்குட்பட்டு வியாபாரம் செய்கின்றவர்களுக்கு எந்தவிதமான வரியும் கிடையாது என்பதை

மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். மங்களகரமான பொருட்கள் என்ற முறையிலாவது இதற்கு விலக்கு கொடுக்கக் கூடாதா என்று கேட்டவர்களுக்கு இது மிகவும் திருப்திகரமாய் இருக்கும் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக நம்முடைய ராஜ்யத்திலிருந்து 'row-wool' வெளிநாடுகளுக்கும் வெளிராஜ்யங்களுக்கும் போய்க் கொண்டிருக்கின்றன. கச்சா ரோமம் வெளியிடங்களுக்கு ஏற்றுமதி செய்வதில் பல பிரச்னைகள் வருகின்றன. லாஸட் பாயின்டில் 3 சதவிகிதம் டாக்ஸ் போட்டிருந்தது. அதோடு ஏற்றுமதி செய்வதில் பல குறைகளும் வந்து கொண்டிருந்தன. அவைகளை எல்லாம் பரிசீலனை செய்து இப்போது அதை மாற்றி அமைத்திருக்கிறோம். The Government have decided to reduce the rate of tax in respect of raw-wool from 3 per cent to 1 per cent with effect from 1st April 1961 as an incentive measure for export .

வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் இதைச் செய்திருக்கிறோம். இதைச் சொல்லுகின்ற நேரத்தில் ராஜ்ய சர்க்கார் என்ன நோக்கத்துடன் ஸேல்ஸ் டாக்ஸ் நடத்தப்படுகின்றது என்பதை கனம் அங்கத்தினர்கள் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். வரி போடுவதினால் வியாபாரம் பாதிக்கப்படும் என்று சொன்னால் அந்த விதமான வரியின் மூலம் அரசாங்கத்திற்கு வருமானம் வருகின்றது என்று இருந்தால் கூட, அதை விட்டுவிடுவதற்கு, அல்லது மாற்றி அமைப்பதற்கு சர்க்கார் தயங்காது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். வரிகளைக் குறைக்க வேண்டும் என்று சொல்லும்போது அல்லது அதற்கான மனுக்களைக் கொடுக்கும்போது சர்க்கார் இரண்டு விதத்தில் அதைப் பரிசீலனை செய்யவேண்டியிருக்கிறது. பொதுவாக வரியைக் குறைக்க வேண்டும் என்று சொல்லும்போது 'எந்த எந்தப் பொருள்களுக்கு வரியைக் குறைக்க வேண்டும் என்கிறார்கள்; அது அவசியமா? அதன் மூலம் ராஜ்ய சர்க்காருக்கு எவ்வளவு வருமானம் குறையும்' என்பதை விசாரணை செய்ய வேண்டியிருக்கிறது. மற்றொன்று, ராஜ்யத்தில் இருக்கக்கூடிய தொழில், வியாபாரம், வர்த்தகம் இவைகள் பாதிக்கப்படுமானால், அவை எந்த அளவுக்குப் பாதிக்கப்படும் என்பதைத்தான் பார்க்கிறோமே தவிர சர்க்காருக்கு நஷ்டம் ஏற்படுவதை மட்டும் கவனிப்பதில்லை. இந்த முறையில் பரிசீலனை செய்துதான் வரிவிலக்கு கொடுக்கிறோம். அவ்வாறு பார்க்கின்ற பொழுது, பால், வறுகடலை, தேங்காய், தீப்பெட்டி இவைகளைப் பற்றியும் பரிசீலனை செய்யப்பட்டது. இப்போது ஒரு சதவிகிதம் பாலுக்குப் போடப்பட்டிருக்கிறது. இதன் மூலம் பால் உற்பத்தியில் எந்த விதமான பாதகமும் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. வாங்கக்கூடிய சக்தியுள்ளவர்கள் இருக்கின்றார்கள் என்று கருதுவதினால்தான் இப்போது போடப்பட்டிருக்கும் வரிக் கூடுதல் அல்ல என்று கருதப்பட்டிருக்கிறது. அதன் காரணமாகத்தான் இதில் விலக்கு கொடுக்க இயலாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதில் முக்கியமாக 10 ஆயிரம் ரூபாய்க்குமேல் தான்

27th March 1961] [Sri R. Venkataraman]

வரி போடப்பட்டிருக்கிறது. இவ்விதம் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்கின்றவர்கள் காம்பௌன்ட் டாக்ஸ கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் எந்தவிதமான பாதக மும் இருப்பதாகத் தெரியவில்லை. விலையைத்தான் கூட்டி வைத்து விற்க வேண்டியிருக்கும். வறுகடலையை பொறுத்தவரையில் அவர்கள் கையிலிருந்து கொடுக்கிறார்கள் என்று சொல்வது சரி யல்ல. ஒன்று விலையைக் கூட்டி விற்கிறார்கள், அல்லது அளவைக் குறைத்து விற்கிறார்கள். உழக்குக்குள காகிதத்தை அடைத்து வைத்து அளந்து கொடுத்து விடுகிறார்கள். இம்மாதிரி செய்வதை எல்லாம் நாம் பார்க்கிறோம். அதனால் எந்த முறையில் அவர்கள் வசூல் செய்கிறார்கள் என்று என்னால் சொல்ல முடியாது. ஆனால் அவர்களே கொடுக்கவில்லை. அவ்விதம் சொல்வதும் தவறு. அதோடு 10 ஆயிரத்திற்குக் கீழ் வியாபாரம் செய்கின்றவர்கள் இதில வரி கொடுக்கவேண்டிய அவசியமில்லை. கனம் சுப்பையா அவர்கள் சொன்னார்கள், ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் முதல் போட்டு வியா பாரம் செய்கின்றவர்கள் இதனால் பாதிக்கப்படுகின்றார்கள் என்று. அவ்விதம் யாரும் பாதிக்கப்பட மாட்டார்கள். இந்த வரி அவர் களுக்குப் போடவும் இல்லை. கனம் சங்கரன் அவர்கள் சொன் னாகளே அவர்களுக்குத் தான் போடப்பட்டிருக்கிறது. ஒரு மூட்டை இரண்டு மூட்டை வாங்கி வியாபாரம் செய்கின்றார்கள் என்று சொன்னார்கள். அவர்கள் வரி கொடுக்கத்தான் வேண்டும். இப்போது அதை மாற்றுவதற்கில்லை.

தேங்காய் சம்பந்தமாக சர்க்காருக்குப் பல மனுக்கள் வந்திருக் கின்றன. அவைகளைப் பரிசிலனை செய்து மத்திய சர்க்காருககு அனுப்பினோம். இது ஆயில் ஸீட் என்ற வகையில் உட்படுமா என்று கேட்டு எழுதினோம். அவர்கள் "டென்டர் கோக்கனட்ஸ்" அதாவது இளநீர் தவிர வேறு எல்லாம் எண்ணெய் வித்துக்கள் என்பதின் கீழ் வரும் என்று சொன்னார்கள். ஆகவே டென்டர் கோக்கனட்ஸ்-க்கு மல்டிபாயின்ட்டில் வரி போடப் பட்டிருக்கிறது. சென்ட்ரல் சேல்ஸ் ஆக்ட் பிரகாரம் என்னென்ன பண்டங்கள் ஆயில் ஸீட்-ஸின் கீழ் வரும் என்பதை நாம் முன்னால் அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அந்த முறை யில்தான் நாம் எழுதினோம். வேண்டுமென்றால் நாம் இதில் என்ன மாறுதல் வேண்டுமானாலும் செய்யலாம், அது வேறு விஷயம். பொதுவாக 'கிளாசிபிகேஷன்' என்ன என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டியிருக்கிறது. "டென்டர் கோக்கனட்ஸ்-ஸை"ப் பொறுத்தவரை இளநீருக்கு ஒருமுனை வரி போட்டிருந்தால் தெருவில் இளநீர் விற்கின்றவர்கள் எல்லோரும் ரெஜிஸ்டர் செய்து கொள்ளவேண்டியிருக்கும். ஆகவே இதைப் பலமுனை வரியாக போடப்பட்டிருக்கிறது. இதோடு 10 ஆயிரம் ரூபாய் அளவுக்கு யாரும் இளநீர் வியாபாரம் செய்வதில்லை. ஆகவே இளநீரைப் பொறுத்தவரை ஒரு நிவாரணம் கிடைத்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். தேங்காயைப் பொறுத்தவரை மேற் கொண்டும் அரசாங்கம் பரிசீலனை செய்யும் என்பதைத் தெரி வித்துக் கொள்கிறேன். அதாவது இதை கொப்பரையாக மாற்றும்போது வரி போடுவதாக இருந்தால் சரியாகுமா

என்பதைப்பற்றி எல்லாம் சர்க்கார் பரிசீலனை செய்யும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இன்னும் ஒன்றிரண்டு மாதங்களுக்குள் இதைப் பரிசீலனை செய்கிறேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். தீப்பெட்டியைப் பொறுத்தவரை இதிலிருக்கின்ற தொல்லை என்னவென்றால், நம்முடைய நாட்டிற்கு வெளியே போகும்போது சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸ் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதற்கு ஒரே வழி என்ன என்பதைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். வரியிலிருந்து தப்புவதற்குரிய உபாயங்களை வரிவிதிப்பு மந்திரி என்கின்ற முறையில் சொல்வது வழக்கம் அல்ல. ஆனால் தொழில் மந்திரி என்ற முறையில் சொன்னேன். அவர்கள் எல்லோரும் சேர்ந்து கூட்டுறவு சங்கம் என்ற முறையிலோ அல்லது அஸோஸியேஷன் என்ற முறையிலோ அமைத்து அதன் கீழ் டெப்போக்களை மற்ற ராஜ்யங்களிலும் அதாவது டெல்லி, கல்கத்தா, பம்பாய் போன்ற இடங்களிலும் ஏற்படுத்தி விட்டார்களேயானால் "trasfer of goods" என்ற முறையில்தான் தீப்பெட்டி வெளியில் போகும், சேல்ஸ் என்ற முறையில் போகாது என்று சொன்னேன் (குறுக்கிடு) ஆம், விற்பனைக்கு சென்ட்ரல் டாக்ஸ் கொடுக்க வேண்டியதுதான். ஆனால் நாம் போடுகின்ற வரிகளைத் தான் இதில் நாம் கேட்க முடியும். நான் சொன்னது போன்று செய்வதற்கு அவர்களும் முயற்சித்தார்கள்.

11-30 a.m. ஆனால் அது நடைபெருததற்குக் காரணம் அவர்களுக்குள்ளே போட்டி. 'உங்கள் கிளி அதிகமாகப் போய்விடும், உங்கள் கோபுரம் அதிகமாகப் போய்விடும்' என்று போட்டி வந்த காரணத்தினால் அவர்கள் செய்யவில்லை (குறுக்கிடு) போட்டி வந்தால் கூட எல்லோருக்கும் தான் லாபம் கிடைக்கும். அவர்கள் இதைத் தெரிந்து கொள்ளாமல் செய்கிறார்கள். கூட்டுறவு சங்கம் அமைத்து, ரிஜிஸ்டர்டு கம்பெனியாக அமைத்து ஏஜென்ஸீஸ் முறையில் எல்லாத் தீப்பெட்டிகளையும் மற்ற ராஜ்யங்களில் டெப்போ திறந்து, டெப்போ மூலமாக விற்பார்களானல் இதில் இருக்கக்கூடிய சிரமங்கள் தீர்ந்துவிடும். ஆகவேதான் அதைச் செய்யும்படி கேட்டுக் கொண்டேன். அவர்கள் அதைச் சரியான முறையில் செய்ய வில்லை. ஆகையால்தான் இதில் கஷ்டம் இருக்கிறது. மீண்டும் அவர்கள் இந்த முறையில் செய்தால் இதில் இருக்கக்கூடிய தொல்லை தீர்ந்துவிடும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

சேல்ஸ் டாக்ஸ் அட்மினிஸ்ட்ரேஷனில் உள்ள குறைபாடுகளைப் பற்றிச் சொன்னார்கள். சில இடங்களில் உத்தியோகஸ்தர்கள் தவறு செய்வார்களானல், அவர்கள் மீது ஏதாவது குற்றச்சாட்டுகள் வந்தால், குற்றச் சாட்டுகள் நிரூபிக்கப்பட்டால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்காகச் சட்டத்தை எந்த விதத்தில் திருத்தினாலும் தவறு செய்கிறவர்கள் என்றும் செய்வார்கள். இப்போது இருக்கக்கூடிய நிலையில் இஷ்டப்படி கணக்கு புத்தகங்களைக் கொண்டு வந்து விடுங்கள் என்று உத்தரவு ஒன்றும் போடப்படவில்லை. கனம் அங்கத்தினர் சசிவர்ணத்தேவர் கூட

